# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 16 Issue 07 February 2022 Rs.25
ஆண்டு 16 இதழ் 07 பிப்ரவரி 2022 ரூ.25



சாரா நந்தினி
வைதீஸ்வரன்
நந்தன் கனகராஜ்
ராஜ்ஜா
ஆசி கந்தராஜா
ரஞ்ஜனி சுப்ரமணியம்
பாதல் சர்க்கார்
டி.ஆர். நடராஜன்
விட்டல்ராவ்
மௌனன் யாத்ரிகா
தக்ஷிலா ஸ்வர்ணமாலி
எம். ரிஷான் ஷெரீப்
ராம் முரளி
வைலார் கஃப்தான்
மாதங்கி
டி. கண்ணன்
நோயல் நடேசன்
இந்திரா பார்த்தசாரதி

## திருமணம் மற்றும் மணவிலக்கு

## பெண்ணை கட்டுப்படுத்துவது எது?

ஆண்டு 16 இதழ் 7

அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

பிப்ரவரி-2022 விலை ரூ. 25



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# இந்த இதழில்...



அட்டையில் ஓவியம்: facebook/reshjayarajk

# திருமணம் மற்றும் மணவிலக்கு பெண்ணை கட்டுப்படுத்துவது எது?

சாரா நந்தினி

சமீபத்தில் வெளியான 'ஷ்யாம் சிங்க ராய்' என்ற திரைப்படத்தில் 'women is not a commodity' என்ற முழக்கம் இடம்பெற்றிருந்தது. பெண்ணைப் பண்டமாகப் பார்க்கும் திரைத்துறையில், வணிக குப்பைகளுக்குப் பெயர் போன தெலுங்கு சினிமாவில் இத்தகையொரு முழக்கம் இடம்பெற்றது முக்கியத்துவம் வாய்ந்தது. மட்டுமல்லாது, இந்திய சமூகம் பிற்போக்குத்தனமான ஆணாதிக்க குணங்களை வெளிப்படுத்தும் இந்தத் தருணத்தில் 'பெண் ஒரு பண்டமல்ல' என்கிற முழக்கம், பாலின சமத்துவம் என்ற நீண்ட நெடிய போராட்டக்களத்தின் தொடக்கப் புள்ளியாகிறது.

தொழிற்நுட்பத்தின் அத்தனை வசதிகளை அனுபவித்தாலும் இந்திய சமூகம் நிலவுடைமை ஆணாதிக்கசமூகமாகவே நீடித்துக் கொண்டிருக்கிறது. அண்மையில் தமிழ் சினிமாவின் பிரபலமான நடிகர் ஒருவர் தனது 18 ஆண்டுக் கால திருமண வாழ்க்கையிலிருந்து விலகுவதாகவும் இது தானும் தனது மனைவியும் சேர்ந்து எடுத்த முடிவு என்றும் அறிவித்தார். அவர் திருமணம் செய்திருப்பது மிகப் பெரும் நடிகரின் மகளை. சினிமா உலகத்தில் மணவிலக்கு இயல்பான ஒன்று. பெண் நடிகர்கள் மணவிலக்கு பெறும்போது, 'உச்சு' கொட்டி வரவேற்கும் சராசரி ரசிகர் மனம், ஒரு நடிகரின் மணவிலக்கு அறிவிப்பைக் கண்டு பதற்றமடைகிறது. பொதுவான நுகர்வு பண்டமாகப் பார்க்கப்படும் பெண் நடிகருக்குத் திருமணமாகி நடிக்கும்போது, ரசிக மனம் ஏற்க மறுக்கிறது. அதே நடிகர் மணவிலக்கு பெறும்போது வரவேற்கப்படுகிறது. ஆண் நடிகர்கள் திருமண உறவைக் கடந்த வேறு உறவுகளில் இருக்கும்போது ரசிக மனம் இயல்பாகவே அதைக் கடக்கிறது. அதை ஆணின் பெருமைக்குரிய விஷயமாகவும் ரசிக மனம் பேசுகிறது. பெண் நடிகர்களை 'பொது மகளிராகப்' பார்க்கும் ரசிக மனம், ஆண் நடிகர்களை இந்திய சமூகத்தின் ஆதர்ஷமான மாதிரி குடும்பத் தலைவராகப் பார்க்கிறது. இந்தக் குடும்பத் தலைவர் எத்தனை பெண்களுடனும் உறவாடலாம்; அவர் குற்றமற்றவர். புரையோடிப் போன ஆணாதிக்க உளவியலின் எடுத்துக்காட்டுகள் இவை. இத்தகைய சமூகச்சூழலில் மிகப் பெரும் நடிகர்கள் மணவிலக்கு அறிவிப்பது அரிதான ஒன்றாகவே உள்ளது.

பெண்ணை பண்டமாகக் கருதி, அவரை ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் பயன்படுத்திக் கொள்ளும் சமூகச் சூழலில், ஆண் ஒருவர் மணவிலக்கு கோரினாலும் கூட அது முற்போக்கான நடவடிக்கையே. சமத்துவத்தை அடைவதில் குறை உள்ளது என்றபோது, ஆணும் பெண்ணும் இணைந்து வாழும் ஒரு திருமண உறவில், இருவரின் இணைவு என்பதே முதன்மையானது. எந்தக் காரணமாக இருந்தாலும் பிணக்கு வந்து, பிரிவதென்று முடிவானால், அதிக இழப்புகளுக்கு உள்ளாகும் பெண்ணுக்கு உரிய இழப்பீட்டை வழங்க வேண்டும் என்பது சட்டம் வழங்கியிருக்கும் பாதுகாப்பு. ஆனால், மணவிலக்கை மிகப்பெரும் மானக்கேடாகப் பார்க்கும் இந்திய சமூகம், இணைந்து வாழ முடியாது என முடிவெடுத்த இருவரை பல்வேறு காரணங்களை கூறி, இணைந்து வாழ வற்புறுத்துகிறது.

"குழந்தைகளின் கதி என்னாகும்?"

"ஆணின் பாதுகாப்பு இல்லாமல் ஒரு பெண்ணால் வாழ முடியுமா?"

"குடும்ப மானம் போகும்!"

"ஆண்கள் என்றால் அப்படி இப்படித்தான் இருப்பார்கள்!"

"நல்ல மனைவியாக இருந்தால் போதும், அட்ஜஸ்ட் செய்து வாழ்..."

இப்படி எண்ணற்ற காரணங்கள் கூறி, தொடர்புடைய இருவரையும் சமூகம் இணைந்து வாழ வற்புறுத்தும். மேற்கண்ட நடிகரின் மணவிலக்கு அறிவிப்பால் பதற்றமடைந்த, அந்தப் பெண்ணின் தந்தையான மிகப் பெரும் நடிகரின் ரசிகர்கள், சமூக ஊடகங்களில் 'தன் தலைவரின் குடும்ப மானம் போய்விட்டதாக' அங்கலாய்க்கிறார்கள்; அவருடைய மகளையும் நடிகரையும் சாபமிடுகின்றனர். திரைத்துறையைச் சேர்ந்த பலர், பெரிய நடிகரின் மனச்சுமையைக் குறைக்க, மணவிலக்கு அறிவித்த இருவரையும் முடிவை பரிசீலிக்கும்படி கோரிக்கை வைக்கிறார்கள்; பேச்சு வார்த்தையில் ஈடுபட்டிருப் பதாகவும் செய்திகள் சொல்கின்றன. இந்தக் காட்சிகள்



நம் சமூகத்தில் அவ்வப்போது நமது அருகாமையிலும் நடப்பவைதான்.

மிகக் கொடூரமாக நடந்துகொள்ளும் ஒருவனுடன் வாழவே முடியாமல், தன் தாய் வீட்டைத் தேடி வரும் பெண்ணை இந்தச் சமூக எப்படி நடத்துகிறது? அவனுக்கு தண்டனைப் பெற்றுத்தருவதற்குப் பதிலாக, அந்தப் பெண்ணிடம் மேலே பட்டியலிட்ட விஷயங்களைச் சொல்லிச் சொல்லி ஒரு குற்றவாளியுடன் வாழ்நாளெல்லாம் வாழ வற்புறுத்துகிறது.

குழந்தை பெண்ணாகப் பிறக்கும்போது, சுமையான பண்டமாகக் கருதும் சமூகம், அந்தப் பண்டத்தை ஏதோ ஒரு ஆணிடம் ஒப்படைத்துவிட நினைக்கிறது. அந்தப் பெண்ணின் திருமண தேர்வு, படிப்பு, பணி, தனிப்பட்ட வளர்ச்சி குறித்த விருப்பங்களை ஒருபோதும் சமூகத்தால் ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. அதிக படிப்பறிவு உள்ளதாக கூறிக்கொள்ளும் மாநிலத்தில், ஆணவக் கொலைகள் அதிகரிப்பதும் பணிக்குச் செல்லும் பெண்களின் விகிதம் மிகக் குறைவாக இருப்பதும் இதையே உணர்த்துகின்றன. குடும்பத்தின் பொருளாதார நலன் கருதியும்கூட, 'குடும்பத்தை, குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளும்' காரணம் காட்டி பெண்களை பணிக்கு அனுப்பாத ஆண்கள் நிரம்பிய சமூகம் இது. ஆணாதிக்க சமூகத்தின் அடக்குமுறைக்கான காரணங்கள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை. அதற்கு மூலமாக இருப்பது பெண்ணை பண்டமாகப் பார்க்கும் சமூக நிலையே.

பிரெஞ்சு பெண்ணியவாதியான லூஸ் இரிகாரே (Luce Irigaray) எழுதிய 'சந்தையில் பெண்கள்' (Women on the Market) என்ற தலைப்பிலான கட்டுரை, மார்க்சிய அடிப்படையில், ஆண்களுக்கிடையே பெண் எப்படி பண்டமாகப் பரிமாறிக்கொள்ளப்படுகிறாள் என்பதை விவரிக்கிறது. அதில் அவர், ஒட்டுமொத்த சமூகமும் பெண்கள் இப்படி பரிமாறிக்கொள்ளப்படுவதை முன்னிறுத்துவதாகக் கூறுகிறார். ஒரு பெண்ணின் பரிமாற்ற மதிப்பு சமூகத்தால் தீர்மானிக்கப்படுகிறது, அவளுடைய பயன்பாட்டு மதிப்பு இயல்பான குணங்களால் மதிக்கப்படுகிறது என்பது இரிகாரேயின் வாதம். ஒரு பெண்ணின் சுயமானது அவளது பயன்பாடு மற்றும் பரிமாற்ற மதிப்புகளுக்கு இடையில் பிரிக்கப்பட்டுள்ளது. ஆனால், அவள் பரிமாற்ற மதிப்பிற்கு மட்டுமே விரும்பப்படுகிறாள் என்கிற இரிகாரே, இந்த அமைப்பு மூன்று வகையான பெண்களை உருவாக்குகிறது எனப் பட்டியலிடுகிறார். முதலாவது தாய், பயன் மதிப்புள்ளவர்; கன்னி, பரிமாற்ற மதிப்புள்ளவர்; மற்றும் பாலியல் தொழிலாளி, பயன்பாடு மற்றும் பரிமாற்ற மதிப்பு இரண்டையும் உள்ளடக்கியவர்.

"ஒரு பெண் இரண்டு உடல்களாக பிரிக்கப்படுகிறாள்: அவளுடைய இயற்கை உடல் மற்றும் அவளது சமூக மதிப்புள்ள பரிமாறக்கூடிய உடல். பெண்கள் தங்கள் சொந்த உடலிலிருந்து அந்நியப்பட்டு, அதற்குப் பதிலாக ஆண்களின் கலாச்சார விழுமியங்களால் வடிவமைக்கப்பட்ட வடிவங்களாகவும் ஆணாதிக்க ஒழுக்கத்தை பிரதிபலிக்கும் கண்ணாடிகளாகவும் ஆகின்றனர். பெண்களுக்குச் சொந்த மொழி இல்லை; அவர்கள் வெறுமனே கிளிகள் போல் ஆண் மொழியை பிரதிபலிக்கிறார்கள்" என்கிறார் இரிகாரே. தான் பட்ட துயரத்தைத் தனது மகளும் அனுபவிக்கும்போது, அதிலிருந்து வெளிவர உதவாமல் மேலும் மேலும் தன் மகள் துயரப்பட அந்தத் தாய் ஏன் விழைகிறாள்? அவள் ஆணாதிக்க ஒழுக்கத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகவும் ஆண் மொழி பேசும் கிளிப்பிள்ளையாகவும் இருப்பதால் அது நிகழ்கிறது.

"ஆண்களுக்கிடையிலான பரிமாற்றங்களில் பெண்கள் பயன்படுத்தும் பொருள்களாகவும், மதிப்பை தாங்குபவர்களாகவும் மாறும்போதுதான் அவர்கள் மதிப்புமிக்கவர்களாக மாறுகிறார்கள்" என இரிகாரே 70களில் எழுதிய ஆய்வின் சாரத்தை, இப்போதும் நம் சமூகம் எடுத்துக்காட்டுகிறது. துன்பங்களைப் பொறுத்துக்கொண்டு, கணவனுடன் வாழும் பெண்ணுக்கு சிலை வைத்து வழிபடும் ஊர் இல்லையா இது?!

அண்மையில் டெல்லி உயர்நீதிமன்றத்தில், விருப்பமில்லாத மனைவியைக் கட்டாய வல்லுறவு கொள்ளும் கணவனின் செயலை குற்றத்துக்குரியதாக அறிவிக்க வேண்டும் எனத் தாக்கல் செய்யப்பட்டிருந்த வழக்குகள் விசாரணைக்கு வந்தன. இந்த வழக்கு விசாரணை பல விவாதங்களைக் கிளப்பியதோடு, ஆணாதிக்க இந்திய சமூகத்தின் கீழான முகத்தையும் வெளிப்படுத்தியது.

பிரிட்டீஷ் ஆட்சிக் காலத்தில் உருவாக்கப்பட்ட இந்தியத் தண்டனை சட்டங்கள், இங்கிலாந்தின் குற்றவியல் சட்டங்களை முன்மாதிரியாகக் கொண்டவை. 1736இல் மேத்யூ ஹேல் என்ற இங்கிலாந்தின் தலைமை நீதிபதியாகஇருந்தவர் எழுதிய 'குற்றவியல் சட்டங்கள்' நூலில் சொல்லப்பட்டதன் அடிப்படையில் இந்தியத் தண்டனை சட்டங்கள் வடிவம் கொண்டன. மேத்யூ ஹேலின் கூற்றுப்படி, 'திருமண ஒப்பந்த அடிப்படையில், தனது சட்ட பூர்வ மனைவியை அவரது விருப்பமின்றி உறவு கொண்டால், கணவர் பாலியல் வல்லுறவு குற்றவாளி ஆகமாட்டார். மனைவி, தன் கணவனுக்குத் தன்னை இந்த வகையில் ஒப்புக்கொடுக்கப்பட்டவர். அதை அவர் திரும்பப் பெற முடியாது'.

இந்தியத் தண்டனை சட்டங்கள், இங்கிலாந்து சட்டங்களின் அடிப்படையில் இயற்றப்பட்டிருந் தாலும் காலப்போக்கில் அவை மாற்றம் கொள்ளவே இல்லை. ஆனால், இங்கிலாந்தில் இப்போது மனைவியின் விருப்பத்துக்கு இணங்காமல் உறவு கொள்வது பாலியல் வல்லுறவாகக் கருதப்பட்டு, தண்டனைக்குரியதாக மாற்றப்பட்டுள்ளது. காலனி ஆதிக்கத்தை விரட்டியடித்துவிட்டாலும் அது தந்த ஆணாதிக்கத்தைக் கடைப்பிடிப்பதில் நம் சமூகம் கூச்சப்படுவது இல்லை. மதங்கள், கலாச்சாரங்கள், நிலப்பரப்புகள் கடந்து ஆணாதிக்கம் உலகம் முழுமைக்கும் ஒரேமாதிரியானது. அளவுகள் மட்டும் வேறுபடலாம். இங்கிலாந்து சமூகம் சற்று முன்னேறியுள்ளதாக தன்னைக் காட்டிக்கொள்கிறது. இந்திய சமூகமோ தன்னை ஆகக் கீழான பிற்போக்கு சமூகம் எனக் காட்டிக்கொள்கிறது.

'திருமண வல்லுறவுகள்' குறித்த வழக்கு விசாரணைக்கு வந்தபோது, ஒருவேளை சட்டமாக்கப் பட்டால் இந்திய ஆண்கள் பாதிக்கப்படுவார்கள் எனக்கூறி, 'திருமணம் செய்ய மாட்டோம்' என சமூக ஊடகங்களில் ஆண்கள் டிரெண்ட் செய்தார். 68 லட்சத்துக்குக்கும் அதிகமான ட்விட்கள் இந்த ஹேஷ் டேக்கின் கீழ் பதிவு செய்யப்பட்டதாக ஒரு புள்ளிவிவரம் கூறுகிறது. தன் இணையை, மனைவியை 'பாலியல் பண்டமாகத்தான் பார்க்கிறோம்' என அளிக்கப்பட்ட ஒப்புதல் வாக்குமூலங்களாகவும் இந்த ட்விட்களை நாம் பார்க்கலாம்.

திருமண வல்லுறவுகளைக் குற்றமாக்குவது உள்ளிட்ட சட்ட சீர்திருத்தங்கள் அவசியம் தேவை. எனினும், பெண்கள் தங்களை பாதுகாத்துக்கொள்ள ஏராளமான சட்டங்கள் இங்கே உள்ளன. ஆனால், அவை நடைமுறைப்படுத்தப்படுவதில்தான் பெரும் தொய்வு உள்ளது. இந்தச் சமூகம் நிலவுடைமை சமூகக் கூறுகளோடு நீடிப்பது தொய்வுக்கான காரணங் களில் முதன்மையானது. படிப்பு, பணி இவற்றின் அடிப்படையில் தன்னை நிலைநிறுத்திக்கொள்ள முடியும் சூழல் உள்ளபோது, ஒரு ஆணை நம்பி யிருக்கும் நிலை பெண்ணுக்கு இல்லை. திருமண வாழ்வில் துன்புறுத்தப்படும்போது, ஒத்துவாழ முடியாத நிலை வரும்போது அதிலிருந்து விலகுவதை சமூகம் இயல்பானதாகக் கடக்க வேண்டும். மணவிலக்குகள் குறைவாக உள்ளதால், சமூகத்தில் ஆண் பெண் உறவுச் சிக்கல்கள் குறைவாக உள்ளன என அர்த்தமாகிவிடாது; எதார்த்தத்தில் அப்படி இல்லவும் இல்லை. மணவிலக்குகள் உறவுச் சிக்கல்களைக் குறைக்கும்; சமூகத்தை உற்பத்தி வளமிக்கதாக மாற்றும். திருமண வாழ்வில் பரஸ்பர ஒப்புதலுடனான உறவு என்பது பாலின சமத்தின் அளவுகோலாக மாறும். ஒட்டுமொத்தத்தில் பழமை யான கருதுகோள்களைக் கைவிடுவது சமூகத்தை முன்னேற்றும்; நாகரிகமானதாக மாற்றும். இதை ஆண்களும் ஆண்மொழியில் பேசும் பெண்களும் சிந்திக்க வேண்டும்.●

# பிரதியைத் தொலைத்தவன்



வைதீஸ்வரன்

பைபிளின் கருத்தை மறுத்தவன் எவனாக இருந்தாலும் அவனைக் கிருஸ்துவப் பாதிரிகள் அன்று உயிரோடு எரிக்கவும் தயாராக இருந்தார்கள். பிற்காலத்தில் கலிலியோவுக்கு நேர்ந்த கொடுமை மிகவும் பிரசித்தமான மத வன்முறைகளுள் ஒன்று.

*அந்த எழுத்தாளர் மனமொடிந்து தன்னுடைய சோகக் கதையை என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தார். இது நடந்தது சுமார் நாற்பது ஐம்பது வருஷங்களுக்கு முன் ஒரு மழை மூட்டமான மாலையில் என்று நினைக்கிறேன்.*

*"எனக்கு தற்கொலை செஞ்சிக்கலாமான்னு இருக்குது."*

*"அய்யய்யோ, ஏன் ஸார் இப்படி நம்பி ஏமாந்து போனீங்க?"*

*"என்ன செய்யறது? என்னுடைய கெட்ட நேரம்."*

*"ஒங்க நாடகப் பிரதி எவ்வளவு பக்கம் இருக்கும்?"*

*"மொத்தம் முன்னூத்தம்பது பக்கம் இருக்கும். கையொடிய நெஞ்சொடிய நானே ராத்திரியெல்லாம் கண் முழிச்சி எழுதினது. அப்போ என் மனைவிக்கு வேறெ உடம்பு சரியில்லே. ராவெல்லாம் வெளக்கைப் போட்டு அவ தூக்கத்தயும் கெடுத்துகிட்டு இருந்தேன். அவ பாவம்." நீங்க எழுதுங்க. எனக்கு ஒண்ணும் உபத்திரவம் இல்லைன்னு அடிக்கொரு தரம் இருமிகிட்டே சொல்லிகிட்டு இருப்பா."*

*"நேரா நீங்களே கொடுத்த பிரதிய எப்படி அந்தப் படுபாவி தொலைக்றான்? நடிகனா இருந்தா மனுஷத்தன்மை இல்லாம போயிடுமா?"*

*"இல்ல் ஸார், என் கெட்ட நேரம்னுதான் நெனைக்கிறேன். பெரிய நடிகர் மூலமா என் நாடகம் அரங்கேறினா எனக்கு பேரும் புகழும் வந்து பெரிய வசதிகள்ளாம் ஏற்படும்னு ஒரு பேராசை. தெரியாத்தனமா கொடுத்துட்டேன்."*

*"எப்போ கொடுத்தீங்க?"*

*"அவரை வீட்டுலெ பாத்து கொடுக்காலாம்னு ரொம்ப முயற்சி பண்ணினேன். எப்போ போனாலும் அவர் வீட்டுலே இல்லேன்னு சொல்லிட்டாங்க. பிறகு அவரு நாடகம் நடந்த அன்னிக்கு தியேட்டருக்கே போனேன். நாடகம் முடிஞ்சவுடனே அவரு ஒப்பனை அறைக்குப் போனேன். அவரு மீசையை எடுத்துட்டு மூஞ்சிலே எண்ணை பூசிகிட்டிருந்தாரு. டோபாவை ஒருத்தன் தலையிலேருந்து கழட்டிக்கிட்டிருந்தான். "அய்யா நான் ஒரு நாடக ஆசிரியர். ஒங்க நடிப்புன்னா எனக்கு உசுரு. உங்களையே மனசுலே வச்சு ஒரு கதாபாத்திரத்தை உருவாக்கி ஒரு நாடகத்தை எழுதியிருக்கேன். நீங்க ஒரு முறை படிச்சுப் பாத்தீங்கன்னா நிச்சயம் இது உங்களுக்குப் புடிச்சிப் போகும்"ன்னேன்.*



"நடிகர் ஒரு துண்டால் முகத்தை வழிச்சுகிட்டு ஒத்தைக் கண்ணால் என்னைப் பார்த்தார். "ஓங்க மாதிரி எழுத்தாளர்கள் இப்படி தேடி வந்து பாராட்டறது பெருமையா இருக்கு. நல்லா இருங்க, நல்லா இருங்க" என்று அடிக்குரலில் சொன்னார். நான் அழகாக பைண்டு செய்து வைத்திருந்த என் நாடகப் பிரதியை தயக்கத்துடன் நீட்டினேன். "டேய் இதை வாங்கி வைய்யிடா"ன்னார். பக்கத்திலிருந்த பையன் அதை வாங்கி மூலையில் வைத்தான். "நான் பாத்துட்டு உங்களுக்கு சொல்லி அனுப்பறேங்க" என்று கை கூப்பினார். என் நாடகப் பிரதியை கடைசியாகப் பார்த்தது அப்போதுதான்."

"அய்யயோ, அப்புறம் அவரைப் பாக்கவே இல்லையா?"

"பிரதியைக் கொடுத்த பிறகு ஒரு மாசம் காத்திருந்து பாத்தேன். யாரும் என்னைத் தேடி வரலே. நடிகர் வீட்டுக்கு நடையா நடந்தேன். எப்ப போனாலும் ஏதாவது ஒரு கும்பல் நின்னுகிட்டு இருக்கும். வெளி யிலெ காவல்காரன் கிட்டே சொன்னேன். "அய்யா ஷூட்டிங் போயிருக்காரு." "அய்யா வெளியூரு போ யிருகாரு." "அய்யா டிஸ்கஷன்லெ இருக்காரு"ன்னு எதையாவது சொல்லிகிட்டே இருந்தான்.

"ஒரு முறை காவல்காரன் இல்லாத சமயமா உள்ளே போய்ட்டேன். அங்கே உட்கார்ந்திருந்த ஒரு பெரியவர்கிட்டே விஷயத்தை சொல்லிக் கண்ணீர் விட்டேன். அவர், "அடடா. தம்பி எதயும் கையிலே வச்சிக்க மாட்டானே!! நான் ஒரு விஷயம் சொல்லட்டுமா? தம்பி எதையுமே படிக்கற வழக்கமே இல்லே. வசனத்தக்கூட டைரக்டரை ஒரு தடவை சொல்லிக் காட்ட சொல்லுவான். அவ்வளவுதான் அப்படியே மனசுலே ரெகார்டு ஆயிடும். திருப்பி உணர்ச்சி வசமா அப்படியே பேசிடுவான். ஆண்டவன் எல்லாருக்கும் அப்படி ஒரு திறமைய கொடுக்கறதில்லே. என் தம்பிக்கு அப்படி ஒரு அருள்!!" என்று தனக்குள்ளெ நெகிழ்ந்து கொண்டார். கொஞ்சம் நெகிழ்ச்சிக்குப் பின், "ஓங்க பிரதியை அப்படி யாரும் களவாண்டு போயிடமாட்டாங்க. இங்கேதான் எங்கயாவது இருக்கும். நான் பாத்து எடுத்து தம்பீகிட்டே என்ன செய்யலாம்னு கேக்கறேன். நாளைக்கி தம்பி சிங்கப்பூரு போவுது. எதுக்கும் ஒரு பத்து நாளு கழிச்சி வந்து பாருங்க" என்றார்.

"நான் பத்து நாள் கழித்து போனேன். அந்தப் பெரியவர் அங்கே தென்படவில்லை. செத்துப் போயிருக்க மாட்டார் என்று சமாதானப்படுத்திக் கொண்டேன். என் கையில் இருந்த ஒரே ஒரு பிரதியை நான் தலைமுழுகிவிட்டேன். என்னுடைய ஆறு மாசத்து உழைப்புப் போய் விட்டது. அதை நெனைச்சா அடிக்கடி தற்கொலை செஞ்சிக்கலாம்னு தோணுது!"

அந்த நாட்களில் பல எழுத்தாளர்களுக்கு மேற்சொன்ன மாதிரி நிறைய அதிர்ச்சிகள் ஏற்பட்டிருக்கின்றன. இன்று போல் அன்று நகலகங்கள் நடைமுறையில் வரவில்லை. பெரிய நாவல்களோ

நாடகங்களோ எழுதுபவர்கள் இன்னொரு பிரதியை தன் கைவசம் எழுதி வைத்துக்கொள்ளுவது பெரிய வேலை. பெரிய உழைப்பு. கார்பன் வைத்துக்கொண்டு எழுதும் முன்னெச்சரிக்கையும் பலர் மேற்கொள்ளவில்லை. தொழில்முறை தமிழ் தட்டச்சு செய்பவர்கள் இருந்தார்கள். ஆனால், உபயோகப்படுத்திக்கொள்ள பணச் செலவாகும். எதிர்கால அங்கீகாரமோ வருமான சாத்தியமோ உத்தரவாதமில்லாத சாதாரண எளிய எழுத்தாளனுக்கு இந்த செலவு சற்று பாரமாகத்தான் இருந்தது.

ஏதோ ஒரு அசட்டு நம்பிக்கையில் என் நண்பர் தன் நாடகப் பிரதியைக் கொடுத்துத் தொலைத்துவிட்டார்.

இன்று நிலைமை அடியோடு மாறிவிட்டது. இப்போதைய கணணி ஊடக வசதிகளால் எழுத்தாளர்கள் தங்கள் ஒரே படைப்பை வெவ்வேறு தலைப்புகளில் நான்கு பத்திரிகைகளுக்கு அனுப்புகிறார்கள்!! எதிர்காலப் பிரயோகத்துக்கும் தங்கள் கைவசம் ஏகப்பட்ட பிரதிகளை வைத்துக்கொள்ளுகிறார்கள்.

அர்ஜுனன அம்புகள் மாதிரி இன்று ஒவ்வொருவரிடமும் ஏராளமான பிரதிகள். தொலைக்கமுடியாத அசாத்யத்தில் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன.

இப்படித்தான் சுமார் அறு நூறு ஆண்டுகளுக்கு முன்பு கோபர்னிகஸுக்கும் ஒரு விபத்து ஏற்பட்டது. சற்று வேறு மாதிரியான விபத்து.

கோபர்னிகஸ் ஒரு மகா மேதை. கிரகங்களின் சுழற்சிகளைப் பற்றிய பேருண்மையைக் கண்டறிந்த போலந்து நாட்டை சேர்ந்த அபூர்வமான வானவியளாளர். தீர்க்கதரிசி. சூரியன் தான் பூமியை சுற்றி வருகிறது என்று அன்று வரை நம்பிக் கொண்டிருந்த பைபிள் வேதக் கருத்தை மறுத்து பூமிதான் சூரியனை சுற்றி வருகிறது என்கிற பௌதீகப் பேருண்மையை முதல் முதலாகக் கண்டறிந்து உலகுக்கு சொன்னவர்.

இந்த ஆராய்ச்சியின் முடிவுக்கு வருவதற்கு பின்பலமாக ஏராளமான விஞ்ஞான பௌதீக கணக்கியல் தகவல்களை அவர் சேகரிக்க வேண்டி யிருந்தது. அது ஒரு பெரிய ஆவணம். அதைத் தயாரிப்பதற்கு அவருக்கு சுமார் 30 வருட காலம் ஆகிற்று. அது முடியும்போது அவருக்கு வயது சுமார் எழுபது. மூப்பின் தள்ளாமை வேறு. இந்த ஆவணத்தைப் பற்றி அறிந்த அவருடைய நெருங்கிய நண்பர்கள் அதை உடனடியாக அச்சில் கொண்டு வர வேண்டுமென்று அவசரப்படுத்தினார்கள்.

ஏராளமான ஆழமான சங்கேத தகவல்கள் அடங்கிய கையெழுத்துப் பிரதி ஒன்றுதான் அவரிடம் இருந்தது. அதை அச்சில் பதிக்கக் கூடிய நல்ல அச்சகம் நியூரம்பர்க் என்ற ஒரே இடத்தில்தான் இருந்தது. வயதின் காரணமாக கோபர்னிகஸால் அங்கே நேரில் சென்று உட்கார்ந்து கொண்டு பிழை திருத்தம் பார்க்க இயலவில்லை.

இந்தப் பொறுப்பான பணியை மேற்கொண்டு செய்து முடிக்க அவரிடம் பாசமும் மரியாதையும் கொண்ட இளம் விஞ்ஞானி ரேடிக்கசு என்பவரிடம் பிரதியை ஒப்படைத்தார்.

ரேடிக்கசு நல்ல முறையில் செயல்பட்டு அச்சுப் பிழைகள் ஒழுங்காக பார்த்து வந்தார். ஒவ்வொரு கட்டத்திலும் திருத்திய பிரதிகளை கோபர்னிகஸுக்கு அனுப்பி ஒப்புதல் பெற்று ஒழுங்காக அச்சுப்படுத்திக் கொண்டு வந்தார்.

துரதிருஷ்டவசமாக அப்போது ரேடிக்கசுக்கு ஒரு பெரிய கலாசாலையில் பேராசிரியர் பதவிக்காக அழைப்பு வந்துவிட்டது. அந்த அரிய வாய்ப்பை அவரால் தட்ட முடியவில்லை. தனால் பாக்கியுள்ள கொஞ்ச வேலையை அவருடைய இன்னொரு நண்பரான ஆண்ட்ரியாஸ் ஒசியாண்டர் என்பவரிடம் ஒப்படைத்து விட்டு கோபர்னிகஸிடமிருந்து விடை பெற்றுக்கொண்டார்.

ஆண்ட்ரியாஸும் நன்றாகத்தான் காரியங்கள் செய்து வந்தார். அந்த அற்புதமான ஆவணத்தை புத்தக வடிவில் தயாரிக்க ஆவண செய்தார். கடைசியாக முன்னுரை ஒன்றுதான் பாக்கி இருந்தது.

அவருக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. கொபர்னிகஸ் எழுதிய கையெழுத்துப் பிரதியில் அவருடைய முன்னுரையின் முடிவில் ஆசிரியரின் கையொப்பத்துக்கு மேல் கொஞ்சம் இடைவெளி இருந்தது. ஆண்ட்ரியாஸுக்கு அந்த இடைவெளியைப் பார்த்தவுடன் கை துறுதுறுத்தது.

கூடியவரை ஆசிரியரின் கையெழுத்தைப் போலி செய்து கீழ்க்கண்டவாறு அந்த இடைவெளியில் தன் வரிகளை எழுதினார்.

> *நீங்கள் வாசிக்கப் போகும் இந்த ஆவணம் வெறும் கையேடுதான் வருங்கால ஆய்வாளர்களுக்கு கிரகங்களின் சுழற்சிகளையும் வேகத்தையும் ஓரளவு சுலபமாக கணித்துக்கொள்ள, அனுமானிக்க இது வானவியலாளருக்கு பயன்படலாம்.*
>
> *மற்றபடி இதில் சொல்லியிருக்கும் பௌதீகத் தகவல்கள் எல்லாம் என்னுடைய ஸ்வாரஸ்யமான கற்பனையே தவிர உண்மையல்ல. சந்தேகமில்லாமல் சூரியன்தான் பூமியை சுற்றிக்கொண்டு வருகிறது - இப்படிக்கு கோபர்னிகஸ்.*

இந்த அதிர்ச்சிகரமான இடைச் செருகலுடன் புத்தகம் வெளிவந்தது. இந்த விஷயம் சில நாட்களுக்குப் பிறகுதான் நண்பர்கள் மூலம் கோபர்னிகஸுக்கு தெரிய வந்தது. தள்ளாத வயதில் இப்படிப்பட்ட

அதிர்ச்சியான தகவலை அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. இது ஒரு பச்சைத் துரோகம். நயவஞ்சகம். கோபர்நிகஸின் நண்பர்கள் இதை எதிர்த்து ஆண்ட்ரியாஸின் மேல் வழக்குத் தொடுக்க வேண்டுமென்று சொன்னார்கள்.

கோபர்னிகஸுக்கு ஏற்கனவே கைகள் நடுங்கி மூளை பேதலித்து விட்டது. அவரால் சிந்திக்க முடியவில்லை. செயல்பட முடியவில்லை.

முப்பது வருட காலம் இரவும் பகலுமாக வானத்தைப் பார்த்துக் கண்டறிந்த அரிய கண்டுபிடிப்பின் இந்த அவலமான வெளிப்பாட்டினால் அவர் ஜடமாகி உடல் விதிர்த்து சில மாதங்களிலேயே இறந்து போனார்.

ஆனால், கோபர்னிகஸ் ஸ்தாபித்த உண்மை இறந்துபோகவில்லை. சூரியனுக்கு நிகரான மேதைமை அவருடையது. பிற்கால விஞ்ஞானிகள் அவர் ஆய்வை சோதித்துப் பார்த்து அதன் இடைச்செருகலில் தொனித்த முரண்பாடான கருத்தை சந்தேகித்தார்கள். அவர் கண்ட தத்துவத்தின் உண்மையை பரிசோதித்துக் கண்டறிந்து கொண்டார்கள். அந்தக் கண்டுபிடிப்பின் முழுப்பெருமையும் கோபர்நிகசுக்கே உரித்தானதென்று உறுதிப்படுத்தினார்கள்.

அவருடைய கையெழுத்தின் மூலப் பிரதி இப்போது போலந்து நாட்டில் அருங்காட்சியகத்தில் பார்வைக்கு வைக்கப்பட்டிருக்கிறது.

இப்போதைய நகல்வசதிகள் அன்று இருந்திருந்தால் கோபர்நிகஸ் அசலைத் தன்னிடம் வைத்துக் கொண்டிருப்பார். நகலைத்தான் நண்பனிடம் அச்சுக்குக் கொடுத்திருப்பார். நயவஞ்சகத்துக்கு இரையாகி இருக்கமாட்டார்.

இந்த தகவலுக்கு ஆதாரம் ‘Moving heaven and earth by John Henry’ என்கிற புத்தகம்.

ஆனால், அந்தக் கால சரித்திர சூழலை பின்னோக்கிப் பார்க்கும் போது ஆண்ட்ரியாஸ் ஓசியாண்டர் செய்த காரியம் கோபர்நிகஸ்ஸின் உயிரைக் காப்பாற்றுவதற்காகத்தான் என்று அனுமானிக்க முடிகிறது. பைபிளின் கருத்தை மறுத்தவன் எவனாக இருந்தாலும் அவனைக் கிருஸ்துவப் பாதிரிகள் அன்று உயிரோடு எரிக்கவும் தயாராக இருந்தார்கள். பிற்காலத்தில் கலிலியோவுக்கு நேர்ந்த கொடுமை மிகவும் பிரசித்தமான மத வன்முறைகளுள் ஒன்று.

ஓசியாண்டர் ‘நம்பிக்கைத் துரோகி’ என்ற பட்டத்தை விரும்பி ஏற்றுக்கொண்டு வயதான அந்த மேதையை மதத்தின் ஆபத்துகளிலிருந்து காப்பாற்றிய பெருந் தியாகி என்று இப்போது சொல்லத் நினைக்கிறேன். ●

**வைதீஸ்வரன்** <vydheesw@yahoo.com>

**கவிதை**

# இசைந்து உதிரும் நீர்

**நந்தன் கனகராஜ்**

மிக
மெதுக்கமான மாலை

மலையின் பள்ளங்களில் கிடக்கின்றன மேகங்கள்

வரத்துக் கால்வாய்களில்
அலகைக் கூர் செய்து
காத்திருக்கின்றன
நீர் நாரைகள்

தண்டுகள் காய்ந்த
ஆகாயத் தாமரைக் கொடிகள்
உயிரேறிக் கொள்ளப்
பார்த்திருக்கிறது

காட்டாமணிப் பூக்கள்
சுழிப்பில்
எப்படியாவது வந்து
சேர்ந்து விடும்

சிறுசிறு
ஜீவராசிகள்
புல் பூண்டுகள்
இன்னும்..
பச்சை போர்த்திய
பசுந்தரைகள்
எதுவொன்றையும்
எப்படி விட முடியும்?

திண்ணை காத்துக்
கொண்டிருக்கும்
எங்கள் கிழவி
உதறி
அள்ளி முடிந்து விட்டாள்

கொசுவத்து அரிவாள் துரு
உதிர..
இப்போது பாடுகிறாள்

எங்கிருந்தோ
சோட்டுக்காரி ஒருத்தியின்
ஒலி இப்போது
இசைந்து கலக்கிறது

கறுப்பேறி
உதிர்ந்து கொண்டிருக்கிறது
மேகம்.

ஆறு
ஒரு கண்ணீர் காதை.

**நந்தன் கனகராஜ்** <skrnandhan@gmail.com>

விருந்தினர் பக்கம்

# ஒரு சிற்பியின் புலம்பல்



ராஜ்ஜா

கவிதைகள் ரசிப்பதற்கு மட்டுமா? வாசிப்பவரின் நெஞ்சத்தை கிள்ளவும் வேண்டாமா? அப்படி என் நெஞ்சத்தை கிள்ளி, பல நொடிகள் என் ரத்தத்தை நரம்புகளுக்குள் வேகமாக விரட்டி, என் மூளையை பரபரப்புக்குள்ளாக்கிய கவிதைகளுள் ஒன்று இது.

இப்படி என்னை பரபரப்புக் குள்ளாக்கும் கவிதைகளை என் டைரியில் நான் குறித்து வைத்துக் கொள்வது உண்டு. அவைகளில் சில கவிதைகள் மீண்டும் மீண்டும் வாசிக்கச் சொல்லும். ஒவ்வொரு முறையும் ஓர் அர்த்தம் கொடுக்காவிட்டாலும் ஒவ்வொரு முறை படிக்கும் போதும் ஒரு சிறப்பான கவிதையை படித்த அனுபவம் கிட்டும்.

ஒரு சொல்லுக்கும் மற்றொரு சொல்லுக்குமான இடைவெளியில் ஒரு சுரங்கமே தெரியும். அதனுள் நுழைந்து பார்த்தால் ஓர் உலகமே தெரியும். அவ்வுலகிலிருந்து மீண்டு வர சில காலம் ஆகும். கவிதை மனதைவிட்டு அகலாது, மென்று அசைபோடச்சொல்லும். மீண்டும் மீண்டும் அரைக்கப்பட்டதாலும், நன்கு செரிமானமானதாலும் அதன் சுவையை மற்றவருக்கும் எடுத்துச் சொல்ல நம் மனம் சொல்லும். நாமும் நம் மனதிற்குத் தடை போடாமல் மற்றவரிடம் சொல்லி மகிழ்வோம். இதுவே ஆகச் சிறந்த கவிதை செய்யும் வேலை.

அப்படிப்பட்டதொரு கவிதை இது, முகநூலில் மிதந்து வந்தது. கவிதையின் தலையில் போடப்பட்டிருந்த ஓவியம்; எலும்பும் தோலுமான ஓர் ஏழைச் சிற்பி, சுத்தியலையும் உளியையும் கைகளில் ஏந்தியபடி, கருங்கல்லில் தான் செதுக்கி முடித்திருந்த பிள்ளையார் உருவத்தை ரசித்துப் பார்த்தபடி அதன் முன் குத்துக்காலிட்டு உட்கார்ந்திருக்கிறான். அவன் முகத்தில் சந்தோஷமும் சோகமும் ஒருசேர குடிகொண்டிருக்கின்றன. ஓவியம் சாதாரண பென்சிலால் வரையப்பட்டதுதான். ஆனால், அதன் ஈர்ப்பு அதீத சக்தி படைத்தது. அதை அந்தக்கவிஞனே வரைந்திருப்பானோ? இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம்.

'ப்ரி ராஃபேலைட்' (Pre Raphaelite) வகையறா ஆங்கிலக் கவிஞர்கள் அனைவருமே அற்புதமான ஓவியர்கள்தானே. அமெரிக்க நகைச்சுவை எழுத்தாளர் ஜேம்ஸ் தர்பர் தனது எழுத்தோவியங்களுக்கு அவரே தானே கோட்டோவியங்கள் வரைந்தார். உலக இலக்கியத்தில் இப்படிப் பல ஓவியக் கவிஞர்களின் பெயர்களைச் சொல்லலாம்.

இந்த ஓவியம் எனக்கு இன்னொன்றையும்; ஞாபகப்படுத்தியது. அது ஒரு கிரேக்கப் புராணக் கதை. சிற்பி பிக்மேலியன் ஒரு பெண் சிலையை வடிக்கிறான். அதன் யவ்வனத்தில் அவனே மையல் கொள்கிறான். அச்சிலைக்கு கலேடியா என்ற பெயரையும் வைத்து அழகு பார்க்கிறான். அவளே தனக்கு மனைவியாக வேண்டும் என்றும் நினைக்கிறான். நினைப்பதோடு நிறுத்திக்கொள்ள அவன் என்ன பைத்தியக்காரனா? அடம் பிடிக்கிறான். யாரிடம் தெரியுமா? காதல் தேவதையான வீனஸிடம். அந்தப் பெண் தெய்வத்தின் கோயிலுக்குச் சென்று, "காதலர்களின் பசலை நோய் தீர்ப்பவள் என்றும், கேட்டதும் கொடுப்பவள் என்றும் மக்கள் சொல்வது உண்மையானால் என் கலேடியாவிற்கு உயிர் கொடுத்து என்னோடு சேர்த்து வைக்க வழி செய், தாயே!" என்று மனம் உருகி வேண்டிக் கொண்டு வீடு திரும்புகிறான்.

வெளியே சென்று வீடு திரும்பும்போதெல்லாம் கலேடி மீயாவை கட்டி அணைத்து அதரத்தோடு அதரம் வைத்து முத்தம் கொடுப்பதை பிக்மேலியன் வழக்கமாகக் கொண்டிருந்தான். அன்றும் அதையேதான் செய்தான். கலேடியாவும் அவனை ஆரத்தழுவி முத்தமழை பெய்தாள். சிறந்த கலைஞனுக்கு வரம் கொடுக்காத கடவுள் இருந்தென்ன? இறந்தென்ன? வீனஸ் வரம் கொடுத்து விட்டாள். அவளே பூலோகமும் வந்து இருவருக்கும் திருமணத்தை நடத்தி வைத்து கதையை முடித்து வைக்கிறாள்.

அந்த பிள்ளையார் சிலையும் சிற்பியும் இருந்த ஓவியத்திற்கு சற்றே கீழே உலா வந்த ஆங்கிலக் கவிதை என்னை ஓர் உலுக்கு உலுக்கியது. கவிதையை எழுதியவர் தன் பெயரை எங்கும் குறிப்பிடவில்லை. ஓவியமும் அனாதையாகத்தான் இருந்தது.

இனி கவிதை..

நான் செதுக்கி முடிக்கும் வரை
நீ கருங்கல்.
நான் சிற்பி.
செதுக்கி முடித்துவிட்டேன்.
இப்போது நீ கடவுள்.
நானோ தீண்டத்தகாதவன்.
கடைசியாய்
ஒரே ஒரு முறை
உன்னை ரசித்து கொள்கிறேன்.
நாளை முதல்
உன் கோயிலில்
என்னை யாரும்
அனுமதிக்கமாட்டார்களே. ●

ராஜ்ஜா <rajbusybee@gmail.com>

நூல் விமர்சனம்

# பல்வகைமைப்பட்ட பதினைந்து சிறுகதைகள்

பணச்சடங்கு (சிறுகதைத் தொகுப்பு) – ஆசி கந்தராஜா;
விலை ரூ. 500; வெளியீடு: எங்கட புத்தகங்கள்;
மின்னஞ்சல்: engadapuththakangal@gmail. com



ரஞ்ஜனி சுப்ரமணியம்

பெண்களின் காமஉணர்வும் தாம்பத்திய வாழ்வின் வயதெல்லைகளும் குழந்தைகள் பெறும் வயதும், நாம் சார்ந்திருக்கும் கலாசாரத்திற்கு ஏற்ப மட்டுப்படுத்தப்பட்டு உள்ளன. குழந்தைகளின் வயது, சமூகத்தின் பார்வைக் கோணங்களுக்கு ஏற்ப பெண் தனது விருப்புகளைத் தியாகம் செய்ய வேண்டிய கட்டாயத்துக்கு ஆளாகிறாள்.

புனைவிலக்கியங்கள் மூலம் உலகளாவிய சமூக மாற்றங்களையும் வரலாற்று நிகழ்வுகளையும் எழுத்து முறைமையினூடாகக் கடத்தும் வல்லமையை சில எழுத்தாளர்கள் பெற்றுள்ளனர். அவர்களின் பரந்த உலக அனுபவமும் தேடலும் தனிப்பட்ட ஆர்வங்களும் இதற்கு காரணமாகின்றன. இவர்கள் கண்டம் விட்டு கண்டம் பாயும் ஏவுகணைகள் போன்றவர்கள். எழுத்து ஒரு வல்லமை மிகுந்த ஆயுதம் என்பதை அவர்கள் உணர்ந்தே இருக்கிறார்கள். ஆனால், இத்தகைய சந்தர்ப்பங்கள் அமையும் அனைவரும் அதை வாசகர் பயனடையும் விதமாக புனைவுகளாக்கும் திறனையும் விருப்பையும் கொண்டிருப் பதில்லை. அமைந்தவர்களால் வாசக உலகு பயனடையும்.

மேன்மையான இலக்கிய அனுபவங்களைத் தரும் புலம்பெயர் ஈழத்து எழுத்தாளர்கள் வரிசையில் ஆசி கந்தராஜா மிக முக்கியமானவர். இவர் தனது பேராசிரியர் பணிநிமித்தம் விரிவுரைகளுக்காகச் சென்ற தேசங்கள் எங்கும் தன் பயணப்பொதிகளுடன் சேர்த்து புதிய கதைக்கான கனவுகளையும் சுமந்தே சென்றவர். அதற்கான முன்னாயத்தங்களில் ஒன்றாக அந்தந்த நாடுகள் பற்றிய பூகோள, சமூக, வரலாற்று அறிவினையும் தேடி அறிந்தே செல்வது வழக்கம் என்பது தெளிவானது.

இந்த வரிசையில் ஆசி கந்தராஜாவின் அண்மைய வெளியீடான ‘பணச்சடங்கு’ சிறு கதைத் தொகுப்பும் முக்கியத்துவம் பெறுகிறது. பல்வகைமைப்பட்ட பதினைந்துசிறுகதைகளின் ஊடாக பத்துக்கும் அதிகமான நாடுகளின் மனிதர்கள், தம் கலாசாரத்தின் சிறு துளியேனும் பகிர்ந்து கொண்டு வாசகருடன் உறவாடுகின்றனர்.

எழுதப்படுபவை எல்லாம் இலக்கியத்தரம் மிகுந்தவை அல்ல. தண்ணீரில் பிம்பம் போல புனைவில் தன்னை, தன் சமூகத்தை, உலகினைக் காணும் வாசகன் ஈர்க்கப் படுகிறான். மனதுக்கு நெருக்கமான மொழியில் கதை சொல்ல வரும் படைப்பாளியின் கலை தன்னைச் சேரும் போது ஐக்கியமாகிப் பயன் பெறுகிறான். ஒப்பனைகளற்ற நிஜங்கள் காட்சிப் படுத்தப்படுகையில் மெய்சிலிர்க்கிறான். அது அறி வியலாகவோ வரலாறாகவோ இன்றைய சமூகம் எதிர்கொள்ளும் சிக்கல்களாகவோ இருக்கக்கூடும். இதனால் வாசகனது இலக்கிய ரசனையும் அறிவும் பண்பாட்டு விழுமியங்களும் ஏனைய கலாசாரங்கள் பற்றிய புரிந்துணர்வும் சீர்பெறுகின்றன. ஆனால், உயிரோட்டம் நிறைந்த மொழிநடை இல்லாவிட்டால் எந்த ஒருநல்ல கதைக்கருவும் வாசகனை ஈர்ப்பதில்லை. ‘ஆசி`யிடம் இந்த லாவகமும் சித்தித்து இருப்பது ஒரு வரம்.

“ஒருஎழுத்தாளன் புத்தகத்தைத் தொடங்கி வைக்கிறான். வாசகன் அதை முடித்து வைக்கிறான்”



என்றார் இலக்கிய மேதை சாமுவேல் ஜான்சன். அதற்கமைய இந்நூல் பற்றிய பார்வையும் அமைகிறது.

இளமை,முதுமை,நடுத்தர வயது எனும் வாழ்வியல் பருவங்களில் மனிதர்கள் எதிர்கொள்ளும் உடல்உள விகாரங்கள்; மருத்துவரீதியான பிறழ்நிலைகள்; உறவுச் சிக்கல்கள்; புலம்பெயர்வு மற்றும் கோளமயமாதலின் விளைவுகளான கலாசார மாற்றங்கள்; முரண் புள்ளிகளை எதிர்கொள்ளத் தயங்கும் மானுடப் போராட்டங்கள்; ஆணாதிக்கத்தின் பல்வேறு குரூர முகங்கள்; உலகநாடுகளின் ஆதிக்கவெறி ஆட்சித் தந்திரங்கள் காரணமாக உருவாகிய போர்கள்; இனஒடுக்கு முறைகள் மற்றும் அகதிகளின் பரம்பல்; இதன் விளைவுகளான பெண் தலைமைத்துவ குடும்பங்கள் எதிர்கொள்ளும் சுமைகள்; அனாதையான சிறார்களின் சீரழிவுகள் என பல்வேறு முகங்களுடன் இப்புனைவுகள் வாசகர் உணர்வுகளுடன் உரசிப் பார்க்கின்றன.

முதுமை என்பது மற்றுமோர் குழந்தைப் பருவம் என்பதும் அனுபவங்களின் மேன்மை என்பதும் எத்தனை உண்மையோ, அத்தனை உண்மை அவலங்களின் உச்சம் என்பதும். சுயநலமும் பிடிவாதமும் விசித்திரமான மனோநிலைகள் விருத்தியடையும் பருவமும் இதுவாகும் என்பது 'அந்திமம்' கதை கூறும் உண்மை. முதுமையில் பலரால் உணரப்படும் பாதுகாப்பின்மையும் தன்னிரக்கமும் மரணம் பற்றிய மனப் பயமுமே இதற்குக் காரணமாக அமைகிறது. பணத்தின் இருப்பு முதுமைக்கு தற்பாதுகாப்பு உணர்வைத் தருவதாக இருக்கலாம்.

நான்கு முதிய பெண்களின் அந்திமகாலத்தை, 'காசு வாசனையும் கொட்டப்பெட்டியும்' என்ற வட்டத்திற்குள் இணைத்திருக்கிறார் கதாசிரியர். இப்புனைவு வாசகருக்கும் தமது முதிய காலம் பற்றிய மனச்சஞ்சலத்தைத் தரத் தவறவில்லை. ஆனால், முதுமை மட்டுமே மனவிகாரங்களைத் தோற்றுவிப்பதில்லை. சந்தர்ப்ப சூழ்நிலைகளும் மனித மனத்தில் மாற்றங்களைத் தோற்றுவிக்கின்றன. சந்தர்ப்பத்துக்கு ஏற்ற முகமூடிகளைத் தேர்ந்தெடுப்பதில் மனிதர்கள் வல்லவர்கள்.

புலம்பெயர்ந்த தமிழர்களின் சுயநலம் மிக்க மனோபாவத்தால் பாதிப்புக்கு உள்ளாகி, உயர்கல்வியையும் எதிர்காலத்தையும் இழக்கும் ஈழத்து இளைஞனின் கதையான 'முகமூடி மனிதர்கள்', மனிதர்களின் ஈனபுத்தி பற்றிய கேள்வியினை எழுப்பி நிற்கிறது. சுயநலம் கொண்ட அவனது முன்னாள் காதலிக்கான தண்டனை, அவளது பெண்மைக்கு ஆபத்தான சந்தர்ப்பத்தில் தவிக்க விட்டுவிட்டு ஓடிய இந்நாள் காதலனால் தரப்பட்டதால், வாசகருக்கு ஏற்படும் குரூரமான சந்தோஷம் தவிர்க்க முடியாததும் நியாயமானதும் ஆகும். அனாதரவான அந்த வேளையிலும் இந்த முன்னாள் காதலனே மீட்பனாக வந்தது விதியின் விளையாட்டு. இது ஒரு வாழ்க்கைப் பாடம்.

முகமூடிகளை மனிதர்கள் அணிந்துகொள்வதற்கு, தாம் கைக்கொள்ளும் மதமும் மார்க்கமும் கூட காரணங்கள் ஆகின்றன. தமக்காகவன்றி தமது பாரம்பரியங்களையும் குடும்ப கௌரவங்களையும் காக்கும் முகமாகவும் பெற்றோருக்காகவும் இம்முகமூடிகள் அணியப்படுகின்றன.

மதரீதியாக இறுக்கமான சிந்தனைகள் கொண்ட நாடு ஈரான். உயர்கல்வியின் நிமித்தம் அவுஸ்திரேலியா வந்திருக்கும் பாரசீக பிரபுத்துவ குடும்பத்தைச் சேர்ந்த ஈரானிய இளைஞன், தன் இளம் மனைவியின் கலாசார மாற்றங்களை ஏற்றுக்கொள்ளாது சந்தேகம்

கொள்கிறான். இதனால் உண்டாகும் இல்லறப் பிளவைக் கூறி நிற்கிறது 'காதல் ஒருவனைக் கைபிடித்து' சிறுகதை. கல்வியால் கூட மாற்ற முடியாத இறுக்கமான மதசிந்தனைகளில், காலத்திற்கேற்ற மாற்றங்களை ஏற்பது தவறல்ல எனக்கூறி தன் உரிமைகளுக்காக போராடும் பெண் றொஸ்நாக்கின் கதாபாத்திரமும் காதலும் இஸ்லாமியப்பெண்களுக்குமுன்னுதாரணமானவை. உண்மையில் ஆடை விடயத்திலும் வேறு சில சம்பிரதாய நடைமுறைகளிலும் இஸ்லாமியப் பெண்களுக்கு விதிக்கப்படும் கட்டுப்பாடுகளை அவர்கள் உண்மையில் மனம் விரும்பித்தான் ஏற்கின்றார்களா என்பது விடை காண முடியாத கேள்வி.

புலம்பெயர் தேசங்களில் தம் கலாசார விழுமியங்களைத்தொலைக்கும்இளைய தலைமுறை யினர் மத்தியில், குடும்ப உறவுகளுக்கு முக்கியத்துவம் கொடுத்ததால் 'மம்மிஸ் பாய்' (Mommy's Boy) என தமிழ் யுவதிகளால் கேலி பேசி ஒதுக்கப்பட்ட இளைஞனை, குடும்ப உறவுகளே முக்கியத்துவம் வாய்ந்தவை என விரும்பி காதல் மணம் செய்த யப்பானியப் பெண் கைய்கோவும் ஒரு உதாரணப் பெண்தான். காதல் வேதியியலின் மகத்துவம் கூறும் 'வேதியின் விளையாட்டு' இது.

வேதியின் விளையாட்டு மனிதா்களுக்கு மட்டுமல்ல அப்பாவி விவசாயியான சரவணை அம்மானின் தற்கொலைக்கும் 'எதிலீன் என்னும் ஹோமோன் வாயு' காரணமாம். இது என்ன கொடுமை என எண்ணத் தோன்றுகிறது. அவர் சாவகச்சேரி சந்தையில் வாங்கி வந்த பிஞ்சு வெண்டிக்காய் வரும் வழியிலேயே முற்றியதன் மர்மமுடிச்சை, இருபத்தைந்து வருடங்களின் பின் சிட்னியில் விடுவிக்கிறார் விவசாய விஞ்ஞானம் அறிந்த கதாசிரியர். கதையில் வரும் மொச்சை வாசனை, மணக்கும் கிடாய் இறைச்சி போல மண்வாசனையும் விஞ்ஞானமும் பதின்மத்தின் முதற்காதல் தோல்வியும் இணைந்து புனைவுக்கு ஆழமான உணர்வேற்றம் தருகின்றன.

'நரசிம்மம்', 'எதிரியுடன் படுத்தவள்', 'கையது கொண்டு மெய்யது பொத்தி', 'தலைமுறை தாண்டிய காயங்கள்' ஆகிய கதைகள் இலங்கை, இஸ்ரேல், பாலஸ்தீனம், சிரியா, லெபனான், ஆர்மேனியா, துருக்கி ஆகிய நாடுகளைத் தளமாகக் கொண்டு, ஆதிக்கவெறி இன வன்முறை போர் ஆகியவற்றின் கோரமுகங்களை புனைவுரூபத்தில் தரும் நிஜதரிசனங்கள் ஆகும். இவற்றின் எதிரொலியாக பெண்கள், சிறுவர்கள் ஈறாக அனைத்து மானுடர்களும் அனுபவிக்கும் துயரங்களையும் பாலியல் வன்முறை முதலான கொடுமைகளையும் சிறார்களின் அவலங்களையும் இக்கதைகள் பேசி நிற்கின்றன. யுத்தத்தின் பேரவலங்களான இடம்பெயர்வும் புலம்பெயர்வின் வலிகளும் முன்னிலைப் படுத்தப்பட்டுள்ளன.

ஆண் துணையிழந்த பெண் தலைமைத்துவ குடும்பங்களின் போராட்டங்கள் அனைத்துக் கதைகளிலும்காணும்மனதைரணமாக்கும்காரணியாக அமைகிறது. இத்தகைய அவலங்களை வாசகர் ஒவ்வொருவரும்தமக்கான அனுபவமாகஒருகணமாவது உணர்ந்தால் மட்டுமே, அதன் வேதனையையும் தீவிர தன்மையினையும் புரிந்துகொள்ள முடியும்.

புனர்வாழ்வு என்ற பெயரில் இராணுவத்தின் பாலியல் வன்கொடுமைக்கு ஆளான முன்னாள் போராளி புனிதவதியின் மகன், தந்தையை யாரென அறியாதவன். யுத்தம் சுமந்த நாடுகள் எங்கும் இவ்வாறான தந்தையறியாச் சிறார்கள் வாழக்கூடும். சிங்க முகமும் புலிவாலும் கொண்டு சிங்களச் சிற்பியின் கற்பனையால் உருவாக்கப்பட்ட 'நரசிம்மம்' என்ற சிற்பக் குறியீட்டினைச் சிதைப்பதன் மூலம் அந்தச் சிறுவன் சொல்ல நினைக்கும் சேதி கதைக்கு ஆழமான பரிமாணத்தைத் தருகிறது. குற்றம் புரிந்தவனை நிந்திப்பதை விட பாலியல் வன்முறைக்கு உள்ளாகும் பெண்களையே நமது சமூகம் உயிரோடு வதைப்பது வழக்கம். 'நரசிம்மம்' கதையின் நாயகி புனிதவதியும் இவ்வாறான நடைப்பிணம்தான்.

உலகெங்கும் நிகழும் யுத்த வன்முறைகள் மூலம் சர்வதேசத்தின் தவிர்க்க முடியாத பிரச்சினையாக உருவாகிய சொல் அகதி. தனக்கு உரித்துடைய நாடு என்பதும் மொழி என்பதும் ஒரு மனிதனுக்கு எத்தனை நெருக்கமானது என்பதை தன் நாடு விட்டு பிறிதோர் நாட்டில் தஞ்சம் கோரும் போது தான் தெளிவாக உணர முடிகிறது. புலம்பெயர் தேசம் என்பது எத்தனை வளமுடையதாக இருந்தாலும் தனது தாய்மண்ணின் வாசனை என்பது ஒரு அகதியினால் எங்குமே நுகர முடியாதது. இந்த உணர்வு 'தலைமுறை தாண்டிய காயங்கள்' கதையில் ஹறூத் என்னும் ஆர்மேனியன் வாயிலாகநெகிழ்ச்சியுடன் உணர்த்தப்பட்டு இருக்கிறது. பிறிதொரு நாட்டில் வாழ்ந்தாலும் ஆர்மேனியா என்ற தன் மூதாதையரின் சொந்த நாட்டின் அவலசரித்திரம் அவனுக்கு கடத்தப்பட்டதுபோலவே ஈழத் தமிழர்களது வரலாறும் புலம்பெயர்ந்தோரின் புதிய தலைமுறைகளுக்கு கடத்தப்படுமா?

'எதிரியுடன் படுத்தவள்' கதையில், பாலஸ்தீனியரை மணந்த யூதப் பெண்ணான அவீவா, தான் இன்று நிம்மதியாக வாழக்கூடிய ஜெர்மனியை விட்டு அகன்று, தன் மகனின் யூத அடையாளத்தை நிரூபிப்பதற்காக ஜெருசலேமில் போராடுவதுபோல, புலம்பெயர்ந்த நம் தமிழர்களும் அவர்களின் வாரிசுகளும் தமது அடையாளங்களை மீட்டெடுக்க என்றாவது ஒருநாள் தாயகத்தை நோக்கி வருவார்களா? இந்தக் கேள்விக்குரிய பதில் நிச்சயம் நகைப்புக்கு உரியதாகவே அமையும். தன் நெஞ்சு தானறியும். வாய்ச் சொல்லில் வீரர்கள் நாம்.

உடல் உளவியல் மாற்றங்களுக்கு பரம்பரை

அலகுகளும் சில ஹோமோன்களும் காரணமாகின்றன. சிலருக்கு அதீதமாகவும் சிலருக்கு குறைவாகவும் செயற்படும் ஹோமோன் சமநிலை மாற்றங்களினால் உருவாகும் சிக்கல்கள் பல. உக்கிரத் தன்மையில் மாறுபாடுகள் இருந்தாலும் பல சிக்கலான மனோநிலைகளின் தோற்றுவாயாக இவை விளங்குகின்றன. 'ஆண் குழந்தை', 'ஆண் சுகம்', 'சாத்திரம் உண்டோடி', 'சாது மிரண்டால்', 'இந்துமதியாகிய நான்' ஆகிய கதைகள் இந்த உடல் உளவியல் குறைபாடுகளை மூலமாகக்கொண்ட கதைகள். பெண்களுக்கு அதீத காமத்தை உண்டாக்கும் நிம்போமேனியா எனும் உடற்தொழில்பாட்டுச் சிக்கலுக்குப் பலியாகும் இளைஞனின் கதை 'ஆண் சுகம்'. வித்தியாசமான கதைப்புலம்.

'இந்துமதியாகிய நான்', ஆண்கள் எப்போதும் தம் பாலியல் குறைபாடுகளை வெளிகாட்டாத ஆணாதிக்க மனநிலை கொண்டிருப்பதையும், இதன் காரணமாக தாம்பத்திய சுகம் அறியாமலேயே, கணவனின் வற்புறுத்தலின் பேரில் இன்னொருவரின் விந்து மூலம் ஐ.வி.எப். முறையில் கருத்தரிக்கும் பெண்ணின் மனவலியையும் குறிக்கிறது. ஆனால், இயற்கை அதற்கான தண்டனையை கணவனுக்குத் தருகிறது.

இதேபோல பெண் குழந்தைகள் தொடர்ந்து பிறப்பதற்கு ஆண்களான தாமே காரணம் என்று உணராமல், ஆண் குழந்தைக்காக பலதார மணம் செய்யும் ஜோர்தானியனான யூசுப்பின் அறியாமையும் ஆணவமும் அவனது நான்காவது மனைவியின் பாலியல் பிறழ்வுக்கு மறைமுக காரணங்கள் ஆகின்றன. இக்கதைகள் இரண்டுமே ஆணாதிக்கத்தின் விளைவுகள்தான். ஆனால், இறுக்கமான கலாசாரக் கட்டுப்பாடுகளில் பெண்களின் மௌன மொழிகள் கேட்கப்படாமலே புதைத்து கிடக்கின்றன.

வெளியுலகிற்கு கண்ணியவான்களாகத் தோற்றம் காட்டும் கனவான்களுக்கும் வாலிபப் பருவம் என்பது மைமல்பொழுது போல மெல்லிருள் சூழ்ந்ததுதான். சாதி என்பது பிறப்பால் மட்டுமே வரையறுக்கப்படுகிறது. பெண்ணின் பிறப்புறுப்பு சாதி வேற்றுமைகளைக் கடந்த சமத்துவமான பிரதேசம் என்பது இப்புனைவால் உணர்த்தப்படும் நகைமுரண். சுவாரஸ்யம் நிறைந்த 'பணச்சடங்கு' கதையின் இறுதிப்பகுதி இந்தக் கண்ணியவான்களின் முகமூடிகளை மட்டும் கிழிக்கவில்லை. புலம்பெயர்ந்தோரின் பொய்முகங்களையும் கலாசார மாற்றம் என்ற பெயரில் எமது பாரம்பரிய பழக்கவழக்கங்கள் கைவிடப்படுவதையும் எள்ளலுடன் சாடி நிற்கிறது. திருமணம் என்பது இருவரின் மனஉறவு என்ற சிறப்பான நிலைதாண்டி, சிக்கலான பகட்டுநிலைக்கு தள்ளப்படுவதையும் 'கால்கிலோ' வாழ்த்துஅட்டை என்ற நையாண்டிப் பதம் வெளிக்காட்டுகிறது. இன்றும் No Box Gift Plese என்னும் நவீன மயப்படுத்தப்பட்ட பணச்சடங்குகளும் வழக்கத்தில் இருக்கத்தான் செய்கின்றன.

'சாத்திரம் உண்டோடி' என்னும் கதை, மறுவாசிப்புகளின் போதும் சிலாகிக்க வைக்கும் சுவாரசியம் கொண்டது. ஐம்பதுகளை அண்மிக்கும் நடுத்தர வயது கீழைத்தேய ஆண்கள் எதிர்கொள்ளும் தாம்பத்திய வாழ்வுச் சிக்கலொன்று சிறப்பாகவும் நகைச்சுவை உணர்வுடனும் கதையாக்கப் பட்டுள்ளது. பெண்களின் காமஉணர்வும் தாம்பத்திய வாழ்வின் வயதெல்லைகளும் குழந்தைகள் பெறும் வயதும், நாம் சார்ந்திருக்கும் கலாசாரத்திற்கு ஏற்ப மட்டுப்படுத்தப்பட்டு உள்ளன. குழந்தைகளின் வயது, சமூகத்தின் பார்வைக் கோணங்களுக்கு ஏற்ப பெண் தனது விருப்புகளைத் தியாகம் செய்ய வேண்டிய கட்டாயத்துக்கு ஆளாகிறாள். இதன் காரணமாக திரிசங்கு சொர்க்கத்தில் தவிப்பது ஐம்பதுகளில் சிக்கி உழலும் 'கற்புநிலை காக்கும் கணவர்களே' என்பது பரிதாபத்துக்கு உரியது. மனைவிக்கு மாதவிலக்கு தள்ளிப் போனதால் சிட்னியில் புலம்பெயா்ந்து வாழும் சுந்தரமூர்த்தியார் படும் அவஸ்தை ரசிக்கத்தக்க விதமாக கூறப்பட்டுள்ளது. தனது விசேட முத்திரைகளான நக்கல் நையாண்டி அங்கதமெனும் அஸ்திரங்களுடன் கதாசிரியர் களத்தில் பின்னி எடுத்துள்ளார் என்றே கூறலாம். அனுபவம் மிக்க கதாசிரியர் அல்லவா?

நவீன மருத்துவம் இவ்வாறான சங்கடங்களை வருமுன் தவிர்க்கவும் வந்தபின் தடுக்கவும் பல வழிமுறைகளைக் கொண்டிருந்தாலும் நமது 'மரியாதை' என்னாவது என ஏங்கி நிற்கும் அந்த அப்பாவி மனிதர் பட்ட பாடுகளை நெஞ்சம் மறக்கவில்லை. காமத்துக்கும் காதலுக்கும் வயதென்றும் வரம்பென்றும் 'சாத்திரம் உண்டோடி' எனக் கேட்கும் படைப்பாளியின் ஆதங்கம்மிக்க கேள்வி நியாயமானது. இதனால்தான் நம் முன்னோர்கள் வயதில் அதிக இளமையான பெண்களைத் திருமணம் செய்தார்களோ என்னவோ?

ஆசியின் புனைவுகளில் இனங்காணும் சிறப்பான பண்புகள் பல உண்டு. பல்வேறு நாடுகளின் கலாசாரத் தகவல்கள், வரலாறுகள் மட்டுமல்ல அடுத்தவரை அளவிடும் மனித மனங்களின் சூட்சுமத்தினையும் அதற்கேற்ப காய்நகர்த்தும் குண இயல்புகளையும் தெளிவாக வரையறை செய்யும் திறனைக் கண்டுகொள்ளலாம். இத்தொகுப்பிலும் ஜோர்தானின் சுற்றுலாத்தலமான 'மரணக் கடல்'; புனிதநகரான ஜெருசலேமின் வரலாறு; சிரியாவின் யுத்தநிலைமைக்கு அடிப்படைக் காரணமான இஸ்லாமிய மதத்தின் சுனி, ஷியா பிரிவுகள்; நூற்றாண்டு கடந்தும் நினைவு கூரப்படும் ஓட்டோமான் துருக்கிப் பேரரசு ஆர்மேனியாவில் நடத்திய பெரும் இனப்படுகொலைப் பேரழிவுகள்; எல்லை நாடுகளின் ஆதிக்கம் என பல தகவல்களைக் கதையோடு இணைத்து கூறும் பாங்கு சிறப்பானது.

●

# பாதல் சர்க்கார் நாடகத்தை உப்பரிகையிலிருந்து வீதிக்குக் கொணர்ந்த ஆளுமை

டி.ஆர். நடராஜன்

இருபதாம் நூற்றாண்டைச் சார்ந்த உலக மற்றும் இந்திய நாடக இலக்கிய மேதைகளை, அவர்களின் படைப்பாக்கத்தின் பின்புலங்களை ஆராயும் முயற்சி இத் தொடர்.

நாடகம் மனித வாழ்வின் பல்வேறு நிலைகளை - இன்பம் துக்கம், கொந்தளிப்பு, அவலம். சினம், சிருங்காரம், காதல் வெறுப்பு என்று ஒரு பெரிய வரிசையே இருக்கிறது - சமூகப் பிரக்ஞையுடனும் தொடர்பு சாதன உள்வாங்கலுடனும் விமரிசனப் பின்புலத்துடனும் எழுந்த இயக்கம்.

பிளாட்டோ, அரிஸ்ட்டாடில் காலத்திலிருந்தே நாடகத்தின் தாக்கம் பற்றியும் முக்கியத்துவம் பற்றியும் வாதங்களும் விவாதங்களும் நிகழ்ந்த வண்ணமாக இருக்கின்றன. மேல்வர்க்கத்தினருக்கும் நகர மனிதர்களுக்குமான நாடகம் என்று ஒரு பிரிவும் கிராமத்தினருக்கும் சாதாரண மனிதருக்குமான நாடகம் என்று ஒரு பிரிவும் கட்டமைக்கப்பட்டு அவரவர் பாணியில் நாடகங்கள் வளர்ந்து வந்தன என்பது சரித்திரம். கிராமப்புற நாடகங்கள் - ஜாத்ரா, தமாஷா, கதகளி, யட்சகானம், பங்காரா, தெருக்கூத்து, நவ்தங்கி, சௌ, ராம்லீலா என்று பிராந்தியத்துக்கு ஏற்ப சூட்டப்பட்ட பெயர்களுடன் - கிராமீயப் பின்புலத்தில் இசையும் நடனமும் கலந்து மண்ணின் மணத்துடன் உருவாக்கப் பட்டவை. நாட்டார் வகை மரபுகளைப் பேணிக் காக்கும் முயற்சியில் அவற்றின் பங்கு அதிக அளவில் இருந்தது.

ஆனால், நகரம் சார்ந்த நாடகக் கட்டமைப்பில் மேலை நாட்டுத் தாக்கம் அதிக அளவில் காணப்பட்டது. பல்வேறு கட்டுப்பாடுகள் இந்த நாடக முறையை வழி நடத்திச் சென்றன, இதன் பின்னணியில் பொருளாதாரம் திறம்படத் தனது வலிமையான இரும்புக் கரங்களை பதித்திருந்தது. நன்கொடை, விளம்பரம், ஏற்பாதரவு ஆகியவற்றைத் தந்த அரசும் பெரிய வியாபார நிறுவனங்களும் நகர நாடகங்கள் எவற்றைப் பற்றிப் பேச வேண்டும், எதையெல்லாம் பேசக் கூடாது என்று திடமான அபிப்பிராயங்களை முன் வைத்திருந்தன.

நெடுங்காலம் இத்தகைய நகர நாடகக்கட்டமைப்பில் தொடர்ந்து பணியாற்றி வருகையில் இந்தக் கட்டுப்பாடுகள் மூச்சுத் திணற வைப்பதாகவும் சுதந்திரமான நடமாட்டத்தை அனுமதிக்க மறுப்பதாகவும் ஒரு கலைஞர்



எண்ணினார். அதன் விளைவாக எழுந்தது 'மூன்றாம் அரங்கம்' என்னும் நாடக இயக்கம். பாதல் சர்க்கார் என்னும் வங்காளி இளைஞரின் புது வரவு நாடக உலகைப் பிரமிப்பில் ஆழ்த்திய அதே சமயம் நகர நாடக அமைப்புகளிடையே அச்சத்தையும் எரிச்சலையும் தூண்டியது என்பது சரித்திர உண்மை.

சமூகத்தில் கண்ட பணக்காரன் - ஏழை, தொழிலாளி - முதலாளி ஆகிய ஏற்றத்தாழ்வுகள் ஏற்படுத்திய பிளவைக் கண்டு பாதல் சர்க்கார் அதிர்ச்சியடைந்தார். அவற்றை எப்படிச் சரி செய்வது என்று அவர் சிந்தித்த போது நாடகம் ஒரு சிறப்பான வழிமுறையாக இருக்கும் என்று தீர்மானித்தார். மனிதர்களிடம் அவர்கள் வாழும் சமூகத்தில் நிரம்பி யிருந்த அவல நிலைமையையும் அது சரி செய்யப்பட வேண்டிய முக்கியத்துவத்தையும் நாடகம் கொண்டு சேர்க்கும் என்று அவர் உறுதியாக நம்பினார்.

இந்திய நாடக இயக்கத்தில் பங்கு வகித்த மிக முக்கிய ஆளுமைகளான ஷம்பு மித்ரா, கிரிஷ் கர்னாட், சத்யதேவ் துபே, பி.வி. கராந்த் ஆகியோர் பாதல் சர்க்காருக்குத் தாம் பட்டுள்ள கடனைச் சொல்லத் தவறியதில்லை. "பாதல் சர்க்காரின் 'பக்லா கோரா' நாடகம்தான் தனக்கு நாடக உருவத்தின் சரளத்தைக் கற்பித்தது" என்றார் கிரிஷ் கர்னாட். தன்னுடைய ஒவ்வொரு படைப்பிலும் 'ஏவம் இந்திரஜித்'தின் தாக்கம் படர்ந்திருப்பதாக துபே கூறியது குறிப்பிடத்தக்கது. "பாதல் சர்க்கார் என் தலைக்குள் உட்கார்ந்து என்னை இயக்குகிறார்" என்றார் மிஸ்ரா.

1925இல் ஒரு கிறிஸ்தவக் குடும்பத்தில் பிறந்த பாதல் சர்க்கார் பொறியியல் படிப்பு முடித்து அரசாங்கத்தில் நகர்த் திட்டத் துறையில் பணியாற்றினார். கிறிஸ்தவராயிருந்தாலும் பின்னாளில் சர்ச்சுக்குப் போவதை நிறுத்தி விட்டார். (எமிலி டிக்கின்சனைப் போல!) வேலையில் இருந்த போது அரசியல் அவரை ஈர்த்தது. இடதுசாரிச் சிந்தனைகளைத் தன்னுள் கொண்டிருந்த அவருக்கு நாளடைவில் கம்யூனிஸ்ட் கட்சியின் நடவடிக்கைகள் திருப்திதராத நிலையில் அரசியலிலிருந்து விலகினார். கட்சி நாடக இயக்கத்துக்குள் ஊடுருவதை அவரால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆனால், தான் கட்சியில் இல்லாவிட்டாலும் கட்சியின் கொள்கைகள் ஏற்படுத்தித் தந்த வழிகளில்தான் தன் செயல்பாடுகள் தொடர்ந்து வந்தன என்று பின்னாளில் ஒருமுறை குறிப்பிட்டார்.

அரசியலிலிருந்து விலகியதும் மறுபடியும் தனது தொழிலை எடுத்து நடத்த ஆரம்பித்தார். ஆனால், சிறுவயது முதற்கொண்டே அவர் மனதில் இருந்த நாடக ஆர்வம் மறுபடியும் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது. முழுக்க முழுக்க நாடக இயக்கத்தில் பணிபுரியும் எண்ணத்தில் அவர் செய்துகொண்டிருந்த வேலையை விட்டுவிட்டார். அவர் நாடக உலகில் முழு நேர கவனத்தை எடுத்துக்கொண்ட போது பல

பிரபலங்களின் பரிச்சயம் அவருக்கு உத்வேகத்தைக் கொடுத்தது.

'தி லிட்டில் தியேட்டர்' குரூப்பை நிறுவி இப்ஸன், ஷா, தாகூர், கார்க்கி, கான்ஸ்டாண்டின் சிமனோவ் போன்ற உலக ஆளுமைகளின் நாடக ஆக்கங்களை வங்காளிகளுக்கு பரிச்சயம் செய்வித்த உத்பால் தத்; பெர்டோல்ட் பிரெக்ட், பிரெண்டல்லோ, அர்னால்டு விஸ்கர் ஆகியோரது புகழ்பெற்ற படைப்புகளை நாடகமாக்கிய அஜிதேஷ் பந்தோபாத்யாயா ஆகிய வியக்திகள் பாதல் சர்க்காரின் வருகைக்கு முன்பு நாடக இயக்கத்திலும் நாடக உலகிலும் தத்தம் முத்திரைகளைப் பதித்திருந்தனர்.

நண்பர்களுடன் சேர்ந்து பாதல் சர்க்கார் 'ஒத்திகைக் குழு' ஒன்றை ஆரம்பித்து நாடக ஒத்திகையை நடத்த ஆரம்பித்தார். ஆனால், அவர் கையாளுவதற்கென்று எதிர்ப்பட்ட நாடகங்கள் தீவிரத் தன்மை கொண்டனவாக இல்லை என்று அவருக்குத் தோன்றிவிட்டது. கற்பனை உலகில் வாழ்ந்துகொண்டு கண்முன் எதிர்ப்படும் சமூக அவலங்களைக் காணாது எழுதப்பட்ட எழுத்துக்களை அவர் நிராகரித்தார். அதனால், அவரே நாடகங்களை எழுத ஆரம்பித்தார்.

'கலை கலைக்காகவே' என்னும் நியதியில் புரண்டு கொண்டிருந்த நாடக ஆசிரியர்களிடம் 'கலை சமூகத்துக்காக; என்னும் கருத்தை எடுத்துச் செல்லும் நாடகங்களை எழுத முற்பட்டார். மனித விழிப்புணர்வைத் தட்டி எழுப்புவதே நாடகங்களின் உயிர்மூச்சாக இருக்க வேண்டும் என்று அவர் கருதினார்.

மனிதன் தனது வாழ்வின் அர்த்தத்தைத் தேடும் விசாரத்தில் இறங்கிக் காண்பது என்ன? மகிழ்ச்சி என்பது உண்மையில் மகிழ்ச்சி அல்ல என்பதையும் உண்மை என்று நாம் கருதுவது ஒரு கோட்பாடென இறுகி நிற்பது என்பதையும் இந்தியத் தத்துவார்த்த மரபில் ரிஷிகள் உணர்த்தியதைத்தான், மேற்கிலிருந்து உதித்த புதிய கருத்தாக்கம் என்று பின்னாட்களில் விளம்பரம் செய்யப்பட்டது.

பாதலின் நாடகங்கள் மனிதரின் அந்நிய மாதலையும் அவர்கள் சொல்ல விரும்பியதைச் சொல்ல முடியாமல் தவிப்பதையும் ஒடுக்குமுறை மற்றும் பல அலைக்கழிப்புகளால் தடுமாறுவதையும் பற்றி விஸ்தாரமாகப் பரிசீலிக்க முயன்றன. மனிதன் மூன்றாம் தரமானவனாகச் சித்தரிக்கப்படுவதும் அதிலிருந்து தப்பிக்க முடியாமல் அவன் திணறுவதுமான சிந்தனைகளை நாடகங்கள் தொட அஞ்சுவது ஏன் என்று அவர் எரிச்சலடைந்தார்.

அபத்த நாடகங்கள் அவரது கவனத்தை ஈர்த்தன. மேலை நாடுகளில் இரண்டாம் உலகப் போரின் சீரழிவுகளால் பாதிக்கப்பட்ட மனித குலத்தை ஆல்பெர் காம்யுவின் நாடகங்கள் சித்தரித்தன. காம்யுவின் 'அபத்த மெய்யியலில்' அவர் வாழ்வின் அர்த்தத்தைத் தேடுவது ஒரு வீண் முயற்சி என்று அறிவித்தார். கிரேக்க இதிகாசக் கதையொன்றில் ஒரு பெரும் பாறையைக் கீழேயிருந்து மலையுச்சிக்கு ஏற்ற முயலும் ஒருவன் அது எப்போதும் மலையுச்சி யிலிருந்து கீழே விழுவதையே பார்க்க வேண்டி யிருக்கிறது என்பதைக் காம்யு மனித வாழ்க்கையில் உண்மையைத் தேடியலையும் முயற்சிக்கு ஒப்பிட்டார். அவர் தனது 'தி மித் ஆஃப் சிசிபஸ்' நாவலில் இன்றைய மனிதனை அபத்தமானவன் என்றும் குறிப்பிட்டார்.

இந்தியாவில், இரண்டாம் உலகப் போர்ச் சீரழிவுகளைப் போல, இந்தியா 1947இல் சுதந்திரம் பெற்ற போது பிரிவினையின் காரணமாக எழுந்த கொந்தளிப்பு மிகுந்த கலவரங்கள், கொலைகள், கொள்ளைகள், அகதிகள் கூட்டம், அவர்கள் வாழ்விற் கான சீரமைப்பு, வேலையில்லாத திண்டாட்டம், ஆங்கிலேயர்கள் விட்டுச் சென்ற திவாலான கஜானா ஆகியவற்றினால் மனிதர்கள் அடைந்த மன உளைச்சல்கள், அவர்கள் இழக்க ஆரம்பித்த நற்பண்புகள், சமூக ஒடுக்கு முறைகள் ஆகியவை தீவிர இலக்கிய எழுத்தாளர்களின் கவனத்தை உசாவின.

பாதல் சர்க்காரின் சிந்தனையில் இருந்து எழுத 'மூன்றாம் அரங்கம்' நாடக எழுச்சி இயக்கம் மரபு சார்ந்த நாடக முறைகளை முற்றிலுமாகப் புறக் கணித்தது. அது பார்வையாளர்களுக்கும் மேடையில் தோன்றுபவர்களுக்கும் இடையே இருந்த தூரத்தைத் தூக்கியெறிந்தது. In Physical Terms! பார்வையாளர்களே மூன்றாம் அரங்கு நாடகங்களில் நடிகர்களாகப் பங்கு பெற்றனர்.

இச்சமயத்தில் ஓர் நிகழ்ச்சியைக் குறிப்பிட்டாக வேண்டும். நாடகத்தின் மீது இருந்த அதி தீவிரக் காதலினால் அதன் நுணுக்கங்களை, மேன்மைகளை, புதிய முயற்சிகளைத் தெரிந்துகொள்ள பாதல் சர்க்கார் இங்கிலாந்து சென்றார். அப்பயணம் குறித்து, "ஆங்கில நாடகங்கள் மிகக் குறைந்த பொருட் செலவில் தயாரிக்கப்படுகின்றன என்பதை அறிந்துகொண்டேன். நாடக மேடைகளுக்கு அப்பால் பார்வையாளர்களை உட்கார வைத்திருந்த பழக்கத்திற்கு மாறாக மேடையைச் சுற்றி அவர்கள் உட்கார்ந்து கொண்டு நாடகம் பார்த்ததையும் அங்குதான் பார்த்துத் தெரிந்துகொண்டேன்" என்று எழுதினார்.

1976இல் பாதல் சர்க்காரின் 'சதாப்தி' என்னும் நாடகக் குழு, கல்கத்தா நகரின் மையப் பகுதியிலிருந்த கர்ஸன் பார்க்கில் நாடகங்களைப் பார்வையாளர்கள் இலவசமாகக் காணும்படி நடத்தியது. அக்குழு கிராமங்களுக்குச் சென்று கிராமப்புற மக்களுடன் கலந்துஉறவாடி நாடகஇயக்கத்தைபிரபலப்படுத்தியது. குழுவினர் தங்கள் பிரயாண மற்றும் தங்கும் செலவுகளுக்காக எவ்விதப் பண உதவியும் பெற்றுக் கொள்ளவில்லை. பாதல் சர்க்காரின் நாடகங்களில் ஆடம்பரமான நாடகக் குழுக்களும் சபாக்களும் கொண்டிருந்த ஒளி, ஒலி உபகரணங்கள், மேடை,



பாதல் சர்க்காருடன் தமிழ் நாடக ஆளுமைகள்

செட், காஸ்டியூம் ஆகியவை தேவைப்படவில்லை. அந்நாடகங்கள் வீதிகளில், மொட்டை மாடிகளில், பார்க்குகளில், வயல் வெளிகளில் நடத்தப்பட்டன.

படாடோபமாற்று, சாதாரண மனித வாழ்க்கையின் உணர்வுகளை எடுத்துச் சொல்வது தன் நாடகங்களின் பொதுப் பண்பாக இருக்க வேண்டும் என்று அவர் நம்பினார். அவரது முதல் நாடகமான 'ஊர்வலத்'தில் கதை என்று ஒரு வடிவம் கிடையாது. கிராமப்புற இளைஞன் ஒருவன் திடீரென்று இறந்து விடுகிறான். அதை பற்றிக் காவல்துறையிடம் அக்கிராம மக்கள் புகார் தருகிறார்கள். ஆனால், இன்ஸ்பெக்டர் அதை ஏற்க மறுத்து யாரும் கொல்லப்படவில்லை என்கிறார். அரசு இயந்திரம் மக்களின் குரலுக்குச் செவிமடுக்காத இயந்திரத் தன்மை வெளிப்படுகிறது. அன்றைய கல்கத்தாவில் இருந்த மின்வெட்டு காரணமாக இடங்களை சூழ்ந்திருந்த இருட்டு மாந்தர்களின் வாழ்க்கைக்கு ஒப்பிடப்படுகிறது. இறந்த இளைஞன் தினமும் கல்கத்தாவின் சாலைகளில் இருப்பவன் என்கிறார் பாதல் சர்க்கார். அவனுக்கு ஆதரவு தர முன்வரும் வயதான கிழவரும் போக வேண்டிய வழியைத் தொலைத்து விடுகிறார். குறிக்கோள்களை அடைய முடியாதபடி வன்முறையும் அடக்கு முறைகளும் விரவிக் கிடக்கும் சூழ்நிலையை எதிரொலித்தபடி.

பார்வையாளர்கள் இளைஞனின் சவத்தைத் தூக்கி கொண்டு ஊர்வலமாகக் கிளம்புகிறார்கள். ஆனால்,நகரெங்கும் ஊர்வலங்கள். புரட்சிக்காரர்கள் ஊர்வலம்,திருவிழா ஊர்வலம்,பஜனைகள் செய்தபடி செல்லும் ஊர்வலம், இறுதி யாத்திரை ஊர்வலம், வேலையில்லாப் பட்டதாரிகளின் ஊர்வலம்,அரசியல் ஊர்வலம், வெள்ள நிவாரண ஊர்வலம், ராணுவ ஊர்வலம் என்று எங்கெங்கு காணினும் ஊர்வலமடா என்று நகரமே மூழ்கிக் கிடக்கிறது. பிணத்தை அவனது வீட்டிற்குத் தூக்கிச் செல்லும் ஊர்வலம் மேலே கண்ட எல்லா ஊர்வலங்களுடன் சென்றாலும் இறுதியில் அதனால் வீட்டைக் கண்டுபிடிக்க முடியவில்லை. எல்லாத் தேடல்களும் வியர்த்தமாகும் சூழலில் வாழும் பெருநகர வாழ்க்கையை பாதல் சர்க்கார் சித்தரிக்கிறார். ஆறு பேர்களைக் கொண்டு நிகழ்த்தப்பட்ட இந்த நாடகம் கிராமப் புறங்களில் பெருத்த வரவேற்பைப் பெற்றது.

மனிதன் படும் கஷ்டங்கள் (வேலை கிடைத்து சம்பாதிப்பது, சுயமரியாதையைக் காப்பாற்றிக் கொள்வது, அன்பையும் நேசத்தையும் அரவணைத்துக் கொள்வது போன்ற சாதாரண விஷயங்கள் கைகூட முடியாத நிலைமை) பற்றி அவரது புகழ்பெற்ற நாடகங்களான 'மற்றுமொரு இந்திரஜித்', 'மீதி சரித்திரம்', 'பெண்டிரின் இக்கட்டு' ஆகியவற்றில் சித்தரித்துப் பெரும் வெற்றியைப் பெற்றார்.

குடும்பச் சூழலில் ஆடவரும் பெண்டிரும் தடுமாறி நிற்கும் நிலையை 'பெண்டிரின் இக்கட்டு' நுணுக்கமாகச் சித்தரிக்கிறது. காதலிப்பது, கைவிட்டு விடுவது, சேர்ந்திருப்பது, பிரிந்து செல்வது, போன்ற செயல்களில் பதிந்திருக்கும் துக்கம், மகிழ்ச்சி,

சிக்கலான ஆண் - பெண் உறவு முறைகளை நாடகம் பரிசீலிக்கிறது. ஆண் சமூகத்தில் ஒரு பெண் சுதந்திரமாக வலம் வர முயல்வது பற்றிய நாடகம் இது. அப் பெண் குழந்தையாய் இருந்தது, வளர்ந்து பெரியவளானது, அவளைத் தேடி வரும் உறவுகள், அவற்றிலிருந்து அவள் விடுபட முயலுவது, இறுதியில் சாவு அவளை அணைத்துக்கொள்வது என்று செல்லும் கதையின் உள்சரடு ஒவ்வொரு கட்டத்திலும் அவளைத் தீர்மானிப்பது ஆண் சமூகம் மட்டுமே என்பதைச் சுட்டிக் காட்டுகிறது.

இந்த நாடகத்தை எழுதிய போது தனது உணர்ச்சிகள் எவ்வாறு இருந்தன என்பது பற்றி பாதல் சர்க்கார், "மாலதி, மில்லி, லட்சுமி எல்லோரும் என்னைப்பொறுத்தவரை உயிரோடுநடமாடுபவர்கள். இப்போது கூட என் முன்னால் அவர்களைப் பார்க்கிறேன். அவர்களை நான் எப்போதாவது தனித்தனி ஆள் என்று நினைத்திருக்கிறேனா? ஒவ்வொருவரிடமும் மற்றவரின் பண்புகள் கொஞ்சம் சேர்ந்து இருந்தன; மாலதி, மில்லி, லட்சுமி மூவரும் ஒரே பெண்தான் என்றும் நான் நம்புகிறேன். ஹிமாத்ரி, சஷி, சத்காரி, கார்த்திக் - இவர்களை எனக்குத் தெரியுமா? இவர்கள் ஆண்களாகத் தனித்தனியாக வருகிறார்களா? இல்லை. அதற்கு அவசியமும் இல்லை. நான் இந்த நாடகத்தைப் பாத்திரங்களை உருவாக்கவென்று எழுதவில்லை. அப்படியானால் என்ன குறிக்கோளுடன் எழுதுகிறேன்? குறிக்கோள், அர்த்தம் கோட்பாடு இவை எதுவும் கிடையாது. ஆனால், நான் இன்னும் எழுதுகிறேன். எழுத்தில் முங்கி விடவேண்டும் என்கிற ஆசையைத் தவிர்த்து விட முடியவில்லை" என்று எழுதினார்.

'மூன்றாம் அரங்கம்' பாதல் சர்க்காரின் நாடக உலகுக்கான கொடை என்றால் அவரது 'ஏவம் இந்திரஜித்' (மற்றும் இந்திரஜித்) நாடகம் முதலில் வங்காளத்தையும் பிறகு இந்தியாவின் மற்ற பிரதேசங்களையும் புரட்டிப்போட்ட சாதனை என்று சொல்லவேண்டும். 1963இல் எழுதப்பட்ட இந்நாடகம் இன்று கிட்டத்தட்ட ஐம்பது வருஷங்களுக்குப் பின்னாலும் கட்டமைப்புடன் புத்துருவாக்கம் போன்று திகழ்கிறது. அயானெஸ்க்கோ ,பெர்டோல்ட் ப்ரெக்ட் ஆகிய உலகின் நாடக ஆளுமைகள் உருவாக்கிய அபத்த நாடகங்களைப் போன்றது ஏவம் இந்திரஜித். அது சமூகக் கட்டமைப்பில் வெறுமையும் உள்ளீடற்று விளங்கும் நவீன வாழ்க்கையினையும் பிரதிபலிப்பதாக விமர்சகர்கள் கருதினார்கள்.

பாதல் சர்க்காரின் நாடகங்கள் இந்தியாவின் பல பகுதிகளையும் சென்றடைந்தது, அவரது 'மூன்றாம் அரங்கம்' வீதி நாடக இயக்கத்துக்கு நாடெங்கும் வித்திட்டது. அவரது புகழ் பெற்ற நாடகமான 'ஏவம் இந்திரஜித்' பல்வேறு மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டது.

தமிழில் கோ. ராஜாராம், ந. பானுமதி, அம்ஷன் குமார், மு. ராமசாமி, ஞானி ஆகியோர் தத்தம் துறைகளில் (எழுத்து, நடிப்பு, ஆவணப்படம்) என்று பாதல் சர்க்காரைப் பெருமைப்படுத்தியிருக்கிறார்கள்.

அம்ஷன் குமாரின் ஆவணப்படத்தில் பாதல் சர்க்கார் தன்னைப் பற்றியும் தன் முயற்சிகளை பற்றியும் இவ்வாறு கூறினார்: "நாடகம் பார்க்க வருபவர்கள் டிக்கெட்டிற்காக பணத்தை செலவழிக்கத் தேவையில்லை. நாங்களும் நாடகத்துக்காக எந்தப் பணத்தையும் செலவு செய்யவில்லை. இதனால் பார்வையாளர்களுக்கும் நாடகம் நடத்துபவர்களுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை. இருவரிடையேயும் ஒருவிதமான நட்பு துளிர்த்து விடுகிறது.

நாங்கள் ஒப்பனை இல்லாமல், பொருட்கள் இல்லாமல் நாடகம் நடத்தப்படும் சிரமத்தைப் பார்வையாளர்களும் காண்கிறார்கள். அதுவே நாடகத்தின் சிறப்பாக அமைந்து விடுகிறது. பார்வையாளர்கள் எங்களுடன் நிற்கிறார்கள். அவர்களுக்கு எங்கள் மொழியை எளிதாகப் புரியவைக்க முடிகிறது. நாங்கள் சொல்ல வந்த சமூக மாற்றம் பற்றிய கருத்தைப் பற்றிய அதிர்வை எளிதாக உருவாக்கமுடிகிறது. நாடகத்தின் நோக்கம் அதுதானே?

ஒருமுறை நாடகம் போடும் போது விளக்கு வசதியில்லாமல் போய்விட்டது. அப்போது பார்க்க வந்தவர்கள் "நாங்கள் சுற்றி நின்று மெழுகுவர்த்திகளைப் பிடித்துக் கொள்கிறோம். நீங்கள் நடத்துங்கள்" என்றார்கள். அப்படியே நடந்தது நாடகம்."

1966இல் சங்கீத நாடக அகாடமி பரிசு, 1972இல் பத்மஸ்ரீ, 1996இல் சங்கீத நாடக அகாடமி ஃபெல்லோஷிப் ஆகியவற்றை பாதல் சர்க்கார் பெற்றார். ஆனால், 2010இல் அவருக்கு பத்மபூஷன் விருது வழங்கப்பட்டபோது அதை ஏற்க மறுத்துவிட்டார். தான் ஏற்கனவே பெற்றிருந்த சங்கீத நாடக அகாடமி ஃபெல்லோஷிப் பத்மபூஷனை விடப் பெரிதும் முக்கியமானதுமாகும் என்று கூறி மறுத்துவிட்டார்.

நாடகம் சமூக மாற்றத்துக்கு வழி கோலவேண்டும் என்று உறுதியாக நம்பிய பாதல் சர்க்கார் தனது முயற்சிகள் மட்டுமே சமூக மாறுதல்களைக் கொண்டு வந்துவிடும் என்று தான் நம்பவில்லை என்றார். அது ஒரு கூட்டு முயற்சி. நாடகம் ஒன்றால் மட்டும் சாதிக்கச் சாத்தியமில்லை. சமூக மாற்றத்துக்கு உதவக் கூடிய பல கருவிகளில் அதுவும் நிச்சயம் ஒன்றாயிருக்கும் என்று திடமாக நம்பினார்.

அரசாங்கமும் அதிகாரிகளும் செல்வந்தர்களும் மட்டும் உப்பரிகையில் உட்கார்ந்து ரசித்த நாடகத்தை சாதாரண இந்தியர்கள் பார்த்து ரசிக்க வேண்டும் என்று வீதிக்கு கொண்டு வந்த ஆளுமை பாதல் சர்க்கார் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. ●

(தொடரும்)

ட்டி.ஆர். நடராஜன்<weenvy@gmail.com>

# பண்டகசாலையும் கடன்கார சொசைட்டியும்



விட்டல்ராவ்

அந்நாட்களில் அரசுத் துறைகளில் என்னென்னமோ வேலைகளுக்காக என்னென்னமோ உத்தியோகங்கள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. அப்படியும் வேலையில்லாத் திண்டாட்டம் பெரிய பூதம் காட்டிக்கொண்டேயிருந்தது.

ரத்தன் சிங் மிகமிக ஒல்லியாகவும் குள்ளமாகவும் ஒரு சின்னப்பையன் திடீரென முதுமையடைந்தாற்போன்றும் தோன்றுவார். அவரை எல்லோரும் 'எல் ஐ, சார்' என மரியாதையோடு குறிப்பிடுவார்கள், அழைப்பார்கள். அந்நாட்களில் அரசுத் துறைகளில் என்னென்னமோ வேலைகளுக்காக என்னென்னமோ உத்தியோகங்கள் ஏற்படுத் தப்பட்டிருந்தன. அப்படியும் வேலையில்லாத் திண்டாட்டம் பெரிய பூதம் காட்டிக்கொண்டேயிருந்தது.

ரத்தன் சிங் வீட்டில் இந்தி பேசுவார். வெள்ளை டிரில் கால சட்டைக்குள் விட்டுக்கொண்ட வெள்ளைச் சட்டையின் கைகளை தம் முழுங்கை வரை மடித்து விட்டிருப்பார். மெலிந்த கையின் 'ரிஸ்ட்'டில் நிற்காது, அவருடைய வெஸ்ட் எண்ட் வாட்சு கை வழியே விழுதுவிடும் என்பதால் மிகவும் மேலே தூக்கி வைத்து முழங்கையருகில் கட்டியிருப்பார். இடுப்போ வயிறோ இல்லாத அந்த குச்சி உடம்பில் பெரிய கால் சட்டையை இறுகக் கட்டியிருப்பார். அந்த மெலிந்த உடலை சமாதானப்படுத்துவது போல் அவரது குரல் உரத்தும் கனத்தும் கம்பீரமாயிருக்கும். எல்லாவற்றுக்கும் மேலே, எல்லாரையும் வாயை மூட வைக்கும் அவரது அப்பழுக்கில்லாத ஆங்கிலம். ரத்தன் சிங் அந்த காலத்து மெட்ரிக் பாஸ் செய்துவிட்டு ரங்கூனில் ரெயில்வேயில் பணிபுரிந்தவர். பர்மாவில் ஜெனரல் நேவின் ஆட்சி வரவும், வெளியேற வேண்டியிருக்கையில், இந்திய அகதிகளில் ஒருவராக வேலையிழந்து ரத்தன் சிங் தம் பர்மிய மனைவி இரு பெண் பிள்ளைகளோடு அஸ்ஸாம் வழியே கல்கத்தா வரை நடந்தும் லாரியில் ஏறியும் வந்தவர் ரயிலேறி சென்னைக்கு வந்தார். நேரு சர்க்கார் அகதிகளுக்கு வேலை வாய்ப்பளிக்கையில் ரத்தன் சிங் சென்னைத் தொலைப்பேசியில் 'சப் இன்ஸ்பெக்டர்' வேலை அளிக்கப்பட்டு பதவி உயர்வில் 'லைன் இன்ஸ்பெக்டர்' ஆனார். அப்போது இன்னும் இரு பெண் குழந்தைகளும் பிறந்தனர். நாலையும் கார்ப்பரேஷன் பள்ளிக் கூடத்தில் போட்டிருந்தார்.

வாடிக்கையாளரின் தொலைப் பேசியிருக்கும் இடத்தையடைய நிறைய கம்பங்களை ஊன்றி அவற்றின் வழியே கம்பிகளைப் பொருத்திஇழுத்துசெல்லுவார்கள். ரெயில்வேயில் அழைப்பது மாதிரி 'GANGMAN' என்றழைக்கப்படும் கூலியாட்கள் கொண்ட குழுவை கண்காணிப்பது, வேலை வாங்குவது, கம்பிகளை, கம்பியமைப்பை சோதிப்பது, எல்ஐயின் பணி. கம்பிகள் தளர்ந்து தொங்குவதை கண்டு இறுக இழுத்துக் கட்டுவது, மரக் கிளைகளை ஒதுக்குவது என்பவை எல்ஐ பொறுப்பிலுள்ள பணிகள்.

என்னை எப்போது பார்த்தாலும் ரத்தன் சிங் பல்லைக் காட்டாமல் சிரிப்பார். போகப்போக சிரிப்பில் சந்தேகம் வந்தது. கை மாற்று கேட்பதற்கான சிரிப்பாயிருக்குமோவென்று பயம் எனக்கு. அது பொங்கல் சமயம். ரத்தன் சிங் என்னைத் தேடி வந்தார். வழக்கமான சிரிப்பில்லாமல் சற்று முகத்தை இறுக்கமாய் வைத்துக்கொண்டு கேட்டார்.

"பொங்கலுண்டா சார், உங்களுக்கு?"

"உண்டே."

"எங்களுக்கு கிடையாது, ஆனா தீபாவளிவுண்டு."

"ஓஹோ."

"பொங்கலுக்கு புதுத்துணி எடுக்கல்லியா?"

"செய்யணும். ஹாண்ட் லூம்ல ரிபேட் தர்ரான்."

"அதெதுக்கு சார்,, நம்ம சி.டி..ஓ ஸ்டோர்ஸ்ல பொங்கல் தீபாவளிக்கு ஏராளமா சூரத் சரக்கே வந்து எறங்கியிருக்கு. மெம்பர் கார்டுக்கு கம்மி ரேட்ல தருவாங்க."

"நா மெம்பர். எனக்கு பொங்கல் இல்ல. தீபாவளிக்குதான் கார்டு வேணும். நீங்க எங்கார்டுல என்ன வேணும்னாலும் வாங்கிக்கங்க. எனக்கு கார்டுக்கு அம்பது ரூபா குடுத்துடுங்க", என்றார் ரத்தன் சிங்.

அப்போது சென்னை தொலைப்பேசிக்கென பிரத்தியேகமான கூட்டுறவு பண்டக நிலையம் ஏற்படவில்லை. மத்திய தந்தி அலுவலக ஊழியர்களுக்கென (CTO- Central Telegraph Office) பெரிய அளவில் ஒன்றுண்டு. அதில் தபால், தந்தி, தொலைப்பேசி ஊழியர்கள், உறுப்பினர் பங்குத் தொகையை செலுத்தி உறுப்பினராயிருந்தனர். பிறகு உறுப்பினர் சேர்க்கையென்பது தந்தி ஊழியரின் கூட்டுறவு பண்டகசாலையில் சில நிபந்தனைகளோடு வெகுவாக குறைந்து போனது.

இந்த சமயம் சென்னைத் தொலைப்பேசியின் மவுண்ட் ரோடு தொடர்பகத்தின் வெளிப்பகுதியை (Exterenal) சேர்ந்த மெக்கானிக் பாண்டுரங்கனின் பரிச்சயம்ஏற்பட்டது.பாண்டு,தொலைப்பேசி ஊழியர் களின் வலிமைமிக்க வலது கம்யூனிஸ்ட் சார்பான தொழிற்சங்கத்தில் கடுமையான விமர்சனங்களையும் எதிர்ப்பையும் வைக்கும் இடது கம்யூனிஸ்ட் சார்பாளரானவர். பணியிலும் சரி, பேச்சிலும் சரி, நறுக்குத் தெரிந்தவர். வாடிக்கையாளரின் எவ்வித அன்பளிப்பையும் நெருங்கவிடாதவர். தொலைப்பேசி ஊழியர்களுக்கென தனியாக ஒரு கூட்டுறவு பொருள் அங்காடியின் அவசியத்தையும் தேவையையும் குறித்து அவ்வப்போது பேசி வந்தவர்.

சென்னை தொலைப்பேசியின் ஊழியர் கூட்டுறவு நுகர்வோர் அங்காடி 1964இல் தொடங்கப்பட்டது. அது டெலிஃபோன் ஹவுஸ் வளாகத்திலேயே இடம்பெற்று இயங்கலாயிற்று. இதில் ஒரு குறைந்த தொகையை ஊழியர் அளித்து உறுப்பினராக முடியும். உறுப்பினர்களுக்குப் பண்டிகை சலுகை விலையிலும் கழிவுகளோடும் துணிமணிகள் விற்கப்பட்டன.

தோழர் பாண்டுரங்கன் அங்காடியின் தலைவர் தேர்தலில் போட்டியிட்டு வெற்றிபெற்று தலைவரான துடன் மளமளவென்று அதன் வளர்ச்சியில் பெரிதும் உழைத்துஉறுப்பினர்களோடு உறுப்பினரல்லாதோரும் பொருள்களை வாங்கும்படியாக மாற்றினார். குடும்பத்துக்கு தேவையான விலையில் மளிகைப் பொருட்களும் குறைந்த விலையில் விற்கப்பட்டன. உறுப்பினர் தொகை அதிகரித்தது. மாதம் முழுக்க வீட்டுக்கு வேண்டிய மளிகை முதலான பொருட் களைக் கடனில் வாங்கிக்கொள்ளும் வசதியை பாண்டுரங்கனின் யோசனைப்படி ஏற்படுத்திற்று ஊழியர்களின் ஸ்டோர்ஸ். அம்மாத சம்பளத்தில் தவறாமல் அக்கடன் தொகை பிடிக்கப்படும்.

கீழ்மட்ட சிப்பந்திகளில் சிலர் தம் உறுப்பினர் அட்டைகளைப் பண்டிகைக் காலங்களில் தேவைப் படுவோருக்கு ரத்தன் சிங் மாதிரி கொடுப்பதற்கு முன் வருவார்கள். கார்டுக்கு இவ்வளவென்று சிறு தொகையை அவருக்குத் தரவேண்டும். ஊழியர் கூட்டுறவு விற்பனை நிலையத்தை நிர்வகிக்கும் பொறுப்புக்கென நிர்வாகிகளைத் தேர்தல் முறையில் நியமித்தனர். நகரின் வெகு தூரத்தில் எங்கெங்கோ இருக்கும் இணைப்பகங்கள், அலுவலகங்களில் பணிபுரியும் ஏராளமான ஊழியர்களை ஓரித்துடத் துக்கு வரச் செய்து வாக்குப் பதிவு செய்ய வைப்ப தென்பது இயலாத காரியமாதலால் அந்தந்த இணைப்பகங்கள், அலுவலகங்களிலேயே அவ்வந்த அதிகாரிகளின் பொறுப்பில் தேர்தல் வாக்குப் பதிவுகள் நடந்து நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பாண்டுரங்கன் மேலும் சில விற்பனை வகைமை களை அறிமுகப்படுத்தினார். இதற்கெல்லாம் அவர் கடுமையாக உழைக்க வேண்டியிருந்திருக்கும். ஸ்டோர்ஸில், கணக்கு வழக்கு பார்க்க, பொருட் களை வாங்கி வைக்க, எடுத்துக் கொடுக்க தட்டெழுத்து இத்யாதி வேலைகளுக்கென்றெல்லாம் வெளியிலிருந்து ஆண், பெண்களை வேலையில் அமர்த்தினர். இந்த சமயம் தவணை முறையில் மிக்சி, மின்விசிறி, தொலைக்காட்சி பெட்டி என்பனவற்றை உறுப்பினர்கள் வாங்கிக்கொள்ளும் வசதியை பாண்டுரங்கன் அறிமுகப்படுத்தினார், அப்போதுதான் நானும் அதில் உறுப்பினராகி தவணை முறையில் வண்ணத் தொலைக்காட்சிப் பெட்டியை வாங்கினேன். இன்றைக்கு ஸ்டோர்ஸ் இல்லை.

தொலைப்பேசி ஊழியருக்கான மற்றொரு இன்றியமையாத வசதியமைப்பு, கூட்டுறவு சொசைட்டி. தொலைப்பேசி தனியார் கம்பெனியாக இருந்த போதே ஊழியர்களுக்கான நலத் திட்டங்கள் ஒன்றிரண்டு இருந்ததாக அறிய முடிகிறது. தனியார்




வசமிருந்த தொலைப்பேசி அமைப்பை பிரிட்டிஷ் அரசு 1943இல் அரசுடைமையாக்கியது. அதன் பிறகு மேலும் நலத்திட்டங்கள் ஊழியருக்கு ஏற்படுத்தப்பட்டன. 1947இல் கடன் சொசைட்டிகள் தொலைப்பேசித் துறையில் நிறுவப்பட்டன. அத்தோடு ஒவ்வொரு தொலைத்தொடர்பகத்திலும் ஊழியருக்கான காண்டீனும் பொழுதுபோக்கு மனமகிழ் மன்றமும் ஏற்படுத்தப்பட்டன. எல்லா அரசுத் துறை ஊழியர்களுக்காகவும் நானாவித கடன் வசதி செய்து தரும் விதமாய் கூட்டுறவு சொசைட்டிகள் நிறுவப்பட்டன. இவற்றின் கௌரவ தலைவர் பதவிக்கு ஊழியருக்குள் சிலர் போட்டியிட்டு வாக்கெடுப்பு நடத்தித் தேர்ந்தெடுக்கப்படுவர். சென்னைத் தொலைப்பேசியில் சொசைட்டி பிராட்வேயை அடுத்த எர்ர்பாலு செட்டித் தெருவில் கடைசி வரை இருந்து மறைந்தது.

சொசைட்டியில் கடன் பெறுவதால் ஊழியர்கள் 'கடங்கார சொசைட்டி' என்றே அழைப்பார்கள். கடன் சொசைட்டி (Credit Society) என்பது சரியான பெயர். பணமுடை என்பது எல்லா காலத்தும் எவ்வித பாகுபாடுமின்றி யாவருக்குமான ஒரு நிலைமை. கடன் சொசைட்டியில் ஓர் ஊழியர் உறுப்பினரானதும் உடனே கடன் வாங்க மனம் நிர்ப்பந்திக்கும். 200 ரூபாய் மாதச் சம்பளம் இருந்தபோது சொசைட்டியின் கடனுக்கு விண்ணப்பித்ததில் தொள்ளாயிரத்துச் சொச்சம் ரூபாய் கிடைத்தது. அது முப்பத்தாறு மாத தவணைகளில் சம்பளத்தில் பிடிக்கப்படும் என்றார்கள். அவ்வளவு பெரிய தொகையைக் கையில் வாங்கும்போது தலையே சுற்றியது. அடுத்த மாதம் அது பிடிக்கப்பட்டு கையில் கிடைக்கும். மீதிச் சம்பளத்தைப் பற்றிய பகீர் எண்ணம் கடன் தொகை கையிலிருந்த போது எழவில்லை.

ஒரு சக உழியர் என்னிடம் சொன்னார்: "வட்டிக்கு வுடுப்பா. நல்லா காசு பண்ணலாம். நா வேணா ஒத்தாசை செய்யறேன்."

எனக்கு அதில் அனுபவமில்லை, ஆர்வமுமில்லை. கொடுத்துவிட்டு வசூல் பண்ணும் திராணியும் கிடையாது, ஜென்மத்துக்கு.

இன்னொருவர் யோசனை கூறினார்: "நானாயிருந்தா மாடு வாங்கிப் போடுவேன்" என்று.

"சீட்ல வுட்டுப்பாரு" என்று ஒருவர்.

"சீட்டாட்டத்திலயா?" என்றேன் நான்.

"ஏலச் சீட்டுப்பா", என்றார்.

என்னை இவ்விதமாய் சிலர் சுற்றிச் சுற்றி வந்தனர். அப்படி எதையும் செய்துவிடாமல் நான், உட்கார்ந்து எழுதுவதற்கு கை வைத்த நாற்காலியும் மேஜையும் வாங்கும் யோசனையோடு நண்பன் விவேகானந்தனைத் துணைக்கு அழைத்தேன்.

"என் ரூம் சின்னது விவேகா, ரெண்டு பேர் இருக்கோம், அதனாலயும் ஃபோல்டிங் சேர், டேபிள்தான் பாக்கணும்," என்றேன்.

"வி.ஜி.பி.க்கு போய் பாக்கலாம்," என்றார் விவேகானந்தன்.

"அது இன்ஸ்டால்மெண்ட் கடையில்லையா?" என்று கேட்டேன்.

"தவணையிலேயும் தருவான், டவுன்கேஷ் குடுத்தும் வாங்கலாம்," என்றார் நண்பர்.

மவுண்ட்ரோடில் அண்ணா சிலை இருக்குமிடத்தில் ஒரு பாதாள கழிப்பறையிருந்தது. அதற்கு முன் அங்கே ஓர் அழகிய நீரூற்று இருந்திருக்கிறது. இப்போது அங்கே சுரங்கப் பாதை இருக்கிறது. இதற்கு சற்று தூரத்தில் 'விக்டரி ஹவுஸ்' என்று அழகிய பழங்கால கட்டிடம் ஒன்றிருந்தது. முதலில் அங்கு சுதேசமித்திரன் அலுவலகம் இருந்தது. அதை ஓட்டி விட்டு 'இந்தியன் ஏர்லைன்ஸ்' விமானக் கழகத்தின் டிக்கட் முன் பதிவு அலுவலகம் வந்தது. இந்தியன் ஏர்லைன்ஸ் போய் வி.ஜி.பி. காட்சிக்கூடம் வந்திருந்தது.

உள்ளே நுழைந்தோம்.

"தவணை முறையில் நாங்கள் தான் இந்தியாவிலேயே முதன் முதலாக டிரான்சிஸ்டர் ரேடியோவை நரிக்குறவருக்கு அளித்தோம்" என்ற அறிவிப்புடன், தோளில் தொங்கும் டிரான்சிஸ்டர் வானொலிப் பெட்டியோடு நடக்கும் நரிக்குறவர் ஒருவரின் பெரிய புகைப்படம் வரவேற்றது.

"விவேகா, மடக்கி வைக்கிற மாதிரி பாருங்க சார்," என்றேன்.

காட்ரேஜ் போல வேறு இரு புகழ்பெற்ற ஸ்டீல் பீரோ, மேஜை நாற்காலி தயாரிப்புகள் அப்போது சந்தையில் இருந்தன. "சந்தன்' என்றும் 'குரோமலைட்', என்றும் அவை. குரோம்லைட் கம்பெனி மட்டும்தான் கை வைத்த - மடக்கும் நாற்காலியைத் தயாரித்து வந்தனர். அது ஒன்றையும் மடக்கி வைக்கும் மேஜையொன்றையும் வாங்கிக் கொண்டேன். ஈஸிசேர் ஒன்றும் அதே கம்பெனி தயாரிப்பாகக் கிடைத்தது.

எனக்கு அறை சித்ரா தியேட்டர் அருகில் ஹாரிஸ் சாலையிலிருந்தது. அந்த கை வைத்த மடக்கும் நாற்காலியின் விலை 26 ரூபா, சாய்வு நாற்காலி 19 ரூபா, மடக்கும் மேஜையின் விலை 5 ரூபா.

“தவணையா, டௌன் கேஷா ?” என்று கேட்டார், அந்த கண்காணிப்பாளர்.

‘டௌன் காஷ்” என்றேன் பெருமையோடு. உடை உடுத்துவதில் நானும் விவேகாவும் விசேஷ - அக்கறை செலுத்துவோம் டௌன்காஷ் என்று சொன்னதுமே அவர் வேறொருவரை அழைத்து மெதுவாக என்னமோ ஓதினார். அவர் எங்களிடம் நெருங்கிவந்து தாழ்ந்த குரலில் மிகுந்த பவ்வியத்தோடு கேட்டார்.

“சார், ஒங்க கார் எங்கே இருக்கு? கொண்டு வந்து டிக்கியில வச்சிடறேன்.”

நானும் விவேகானந்தனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம்.

“கார் கொண்டு வர்ல. பக்கத்திலதான் வீடு. ரெண்டு பேருமே சேந்து தூக்கிட்டே போயிடுவோம்,” என்றேன்.

அப்படியும் வெளி வாசல் வரை அவர் அவற்றை எடுத்து வந்து கொடுத்து விட்டு விடை தந்து அனுப்பினார்.

சொசைட்டியில் முக்கியமாய் இருவித கடன்களை உறுப்பினர்கள், தவறாது, காலந்தோறும், தாம் பணி யிலிருந்து ஓய்வு பெறும் வரை வாங்கிக்கொண்டே இருப்பார்கள் வேண்டாமென்று எழுதிக் கொடுத்து சொசைட்டியிலிருந்து வெளியேறியவர்கம் உண்டு. தொலைப்பேசியில் சொசைட்டி என்பது அத்துறையில் அவரவர் சார்ந்து உறுப்பினராயுள்ள தொழிற்சங்கத்துக்கு அடுத்து முக்கியமானது. அந்த முக்கிய இருவித கடன்களில் ஒன்று, சாதாரணக் கடன் (Ordinary Loan). மற்றொன்று அவசரக் கடன் (Emergencu Loan). சாதாரணக் கடன் நிறைய தவணைகளில் பிடித்துக் கொள்ளப்படும். அவசரக் கடன், இந்த மாதம் எவ்வளவு வாங்குகிறோமோ, அவ்வளவையும் ஒரே மாதத்தில், அடுத்த மாதமே சம்பளத்தில் பிடித்து விடுவார்கள். அதில்லாமல் இலாகாவில் தரும் ரேடியோ அட்வானஸ், சைக்கிள் அட்வான்ஸ், பண்டிகை அட்வான்ஸ் எல்லாவற்றுக்குமான மாத தவணைப் பணம் என்று சம்பளத்தில் பிடித்துப் போக கையில் ‘ரெவின்யூ ஸ்டாம்பு’ ஒட்டி கையில் வாங்கும் ஐம்பது ரூபாய்க்கும் குறைந்த சம்பளம், அப்போது தான் ‘பிச்சைக்கார சம்பளம்’ என்று எரிச்சலுடன் பட்டம் வாங்குகிறது. குழந்தைகள் அதிகமிருக்கும். குடும்பத் தலைவர் ஒருவரே சம்பாதனையாளராயிருப்பார். மனைவி படிப்பறிவு இல்லாதவராயிருப்பார். இது போன்ற சர்க்கார் சிப்பந்திகளே அன்றைக்கு அதிகம். தொலைப்பேசி இலாகாவும் ஓர் எடுத்துக்காட்டு. எனவே, பிரதிமாதம் எட்டாம் தேதியை இவர்கள், ‘இரண்டாவது சம்பளம் வாங்கும் நாள்’ என குதூகலத்தோடு சொல்லிக் கொள்ளுவார்கள்.

காலை எட்டு மணியிலிருந்தே தொலைப்பேசி இணைப்பகங்களில் சுறுசுறுப்பாக இருக்கும். இணைப்பகங்கள் அன்றைக்கு 24 மணி நேரமும் இயங்க கூடியதாக பல ஷிஃப்டுகளில் இருந்தது.

“பிங்க் ஃபாராமிருக்கா, பிங்க் ஃபாரம்?” என்று சிலர் அங்குமிங்கும் எதிர்படுவோரைக் கெஞ்சிக் கேட்டபடி..

அவசரக் கடன் பெற விண்ணப்பிக்கும் அந்த படிவம் இளஞ்சிவப்பு நிறத்தாலனது. அதன் விலை பீசாத்து அஞ்சு பைசாதான்; ஆனால், அது குதிரைக் கொம்பு. எர்ரபாலு செட்டித்தெருவுக்கே போய் சொசைட்டியிலிருந்துதான் வாங்கி வரவேண்டும். ஷூரூட்டி கையெழுத்திட மற்றொரு உறுப்பினர் வேண்டும். அது பெரிய விஷயமல்ல. சொசைட்டி கட்டிடத்தில் உறுப்பினர்கள் நிறைய பேர் அங்குமிங்குமாய் அலைந்தபடி போய் வரவேண்டுமே. டூட்டியிலுருப்பவர்கள் எப்படி போக முடியும். அதற்கு ஒரு வழியிருந்தது. ஒரேயொரு ‘ஆதரைசேஷன்” கடிதத்தில் எல்லாரது படிவ எண்களையும் பெயரையும் எழுதி ஒருவரை நியமித்து அவரிடம் தந்து சொசைட்டிக்கு காலையிலேயே அனுப்பிவிட்டால் மதியம் இரண்டு மணிக்கெல்லாம் பணத்தோடு வந்து விடுவார். யாராருக்கு எவ்வளவோ அந்த பணத்தை எடுத்துத் தருவார். அவருக்குப் போக வரப் பயணச் செலவும் காபிக்கு காசும் எல்லோரும் சமமாய்ப் பகிர்ந்தளித்து அனுப்புவார்கள்.

சொசைட்டி பிடித்தம் சம்பளத்தில் நூறு ரூபாய் என்றால், அந்த நூறு ரூபாயை எட்டாந்தேதியன்று இளஞ்சிவப்பு படிவத்தில் எழுதிக் கொடுத்து அவசரக் கடனாக வாங்கிக்கொள்ளலாம். அடுத்த மாதம் வழக்கமான பிடித்தங்களோடு இந்த அவசரக் கடனையும் சேர்த்துப் பிடிப்பார்கள். சிலருக்கு சம்பளமே இருக்காது (Nil Salary); ஆனாலும் அவர் ரெவின்யூ ஸ்டாம் ஒட்டி அதன்மீது கையெழுத்திட்டு, தனக்கு இவ்வளவு சம்பளம், இவ்வளவு அட்வான்ஸ், அவற்றுக்கான மொத்த பிடித்தம், நிகர சம்பளம் இவ்வளவு என்பதை ரெவின்யூ ஸ்டாம்ப் ஒட்டித்தான் கையொப்பிட வேண்டும். பிங்க் படிவங்களை சிலர் நூறு, ஐம்பதென்பது கட்டாக வாங்கி வைத்திருப்பார்கள். படிவம் ஒன்றுக்கு 25 பைசா எனவும் வாங்கிக் கொண்டு தருவார்கள். அப்படியும் தொலைப்பேசி இணைப்பகங்களில் மாதத்தில் எட்டாம் தேதி என்பது புனர் ஜென்மம் போல 2ஆவது சம்பள நாள். பிஎஸ்என்எல்லின் இப்போதைய அந்தி மங்கிய காலத்தில் சொசைட்டி என்பதெல்லாம் பசித்தவன் பழங்கணக்கு.

(தொடரும்)

# மௌனன் யாத்ரிகா கவிதைகள்

ஓவியம்: வெங்கட்





1.

பேச்சுத் துணையற்ற
இந்த இரவு
கடும் குளிராக இருக்கிறது
வானில் நட்சத்திரங்கள் கூட
நடுங்குவதைக் காண்கிறேன்
தனிமையை அருந்தினால்
அது கசப்பாக இருக்கிறது
ஒரு சொட்டு தேன்துளி சேர்க்க
இந்த நீண்ட இரவில்
யார் வரக்கூடும்!
ஒரு கத்தியாய் மாறி
எலும்பை அறுக்கிறது பனி
குருதியின் சுவையறிய

நெருங்கும் ஓநாயைப்போல்
காற்று வீசுகிறது
இந்த இரவையும்
பனியையும் குளிரையும்
கொஞ்சம் அன்பிருந்தால்
கதகதப்பாக மாற்றிக் கொள்வேன்
எனக்கது கிடைக்குமா என்றுதான் தெரியவில்லை.

2.
தூரத்தில் இருக்கும்
ரயில் பாதையில்
இன்று
ஒரு செடியைப்
பார்த்துவிட்டு வந்தேன்
இரண்டொரு மலர்கள் இருந்தன
வாழ்வின் மீது
தீராத தாகமுடைய
அதன் சிறிய இலைகள்
காற்றுக்கு ஆடிக்கொண்டிருந்தன
எனக்கு
அதன் வேரின் பாடலைக்
கேட்க வேண்டும்போல் இருந்தது
நான்
மெல்ல அதன் மீது
காது வைத்து
கேட்கத் தலைப்பட்ட கணத்தில்
ரயில் வரும் ஒலி கேட்டது
தண்டவாளத்தின் அதிர்வில்
அந்தப் பாடல் அழிந்துபோனது
அந்த சோகத்தை
யாரோடாவது பகிர்ந்துகொள்ள வேண்டும்
உந்தன் மடி கிடைக்குமா அன்பே.

3.
திறந்திருக்கும் ஜன்னல் வழியே
என் தனிமையைப்
பாட வருகிறது
குளிர்ந்த பனிக்காற்று
அதற்குரிய பல்லவியை
என்னை
எடுத்துத் தரச் சொல்லிவிடுமோ
என்று
கலக்கத்தில் இருக்கிறேன்
ஒருவேளை அப்படி நேர்ந்துவிட்டால்
எனக்கு உதவி செய்வாயா?
காதலின் தூய வரியொன்றை
என் காதில் இறக்கி வைப்பாயா?

4.
இரவைக் குறித்து
யாரோ எழுதிய வரிகள்
என் உறக்கத்தைக் கெடுத்துவிடுவதைப்போல்
பிரிவைக் குறித்து
யாரோ பாடிய பாடல்
என் நிம்மதியைக் குலைத்து விடுவதைப்போல்
உறவைக் குறித்து
யாரோ சொன்ன கதைகள்
என் வாழ்வை நீட்டித்து விடுவதைப்போல்
காதலைக் குறித்து
ஏதாவது ஒரு வரியையோ
அல்லது
ஒரு பாடலையோ
அல்லது
ஒரு கதையையோ
என்னோடு பகிர்ந்து கொள்ளேன்
ஏனெனில்
தனிமையான இந்த இரவில்
என்னோடு ஒரு துணையுமில்லை
நான்
இலையுதிர்ந்த மரத்தில்
அமர்ந்திருக்கும்
ஒற்றைப் பறவையின்
நிலையிலிருக்கிறேன்.

5.
மானின் தாகத்துக்கும்
ஓநாயின் தாகத்துக்கும்
வித்தியாசம் இருக்கிறது
மானுக்கு
நீரில்
காட்டின் ருசியிருந்தால் போதும்
ஆனால்,
ஓநாய்க்கு
அதில் குருதியின் வாடையும் இருக்க வேண்டும்
எனக்கிருப்பது
கொஞ்சமே கொஞ்சமான
மானின் தாகம் மட்டுமே.

6
கதவை
காற்று தொடுகிறது
நீதான் வந்து வாசலில் நிற்கிறாயோ என்று
நான் நினைக்கிறேன்
எங்கோ தொலைவில்
பறவை பாடுகிறது
நீதான் என்னை
அழைக்கிறாயோ என்று
நான் பரிதவிக்கிறேன்
யாரோ யாரையோ
நினைத்து
அழுகிறார்கள் போல்
ஓர் எண்ணம் தோன்றி மறைகிறது
நீதான் எனக்காக
வருந்துகிறாயோ என்று



எனக்கு வாதையாய் இருக்கிறது
எந்த கணத்திலும்
மூழ்கி விடலாம் என்பதுபோல்
ஆற்று நீரில்
சருகொன்று போய்க்கொண்டிருப்பதுபோல்
மனதில்
ஒரு
காட்சி ஓடுகிறது
உன்னைக் கரை சேர்க்க மாட்டோமா என்ற
தவிப்பு உருவாகிறது
ஏன் இதெல்லாம்
நடக்கிறது?
இதன் பொருளை
நான் யாரிடம் தெரிந்துகொள்வேன்?

7
இப்போது மட்டும்
பசிகொண்ட ஒரு புலியைக் காண்பேன் எனில்
என்னைக்
கொன்றுக் குதறித் தின்றுவிடு என்று
விட்டுவிடுவேன்
இப்போது மட்டும்
ஒரு பாம்பின் முகத்தைக் காண்பேன் எனில்
அதன் நாக்கில் முத்தமிட்டு
அதன் தொண்டைக் குழியில் இருக்கும் நஞ்சை
நானே உறிஞ்சி விழுங்கி விடுவேன்
இப்போது மட்டும்
பனிமலையில் அலையும்
ஓநாயைக் காண்பேன் எனில்
அதன் மூக்கைத் துளைக்குமாறு
என் கால் நரம்பை அறுத்துக்கொண்டு
குருதியைப் பீறிடவிடுவேன்
இப்போது மட்டும்
ஆந்தையின் மஞ்சள் நிற கண்களைக்
காண்பேன் எனில்
அதன் காதுகளுக்கு எட்டுவதைப்போல்
துயரமான ஒரு பாடலைப்
பாடிவிடுவேன்
ஐயோ...
இந்தக் காமத்தின் வாதையை
என்னால் தாளமுடியவில்லையே.

8
ஒரு வயலினை வாசித்துக்கொண்டோ
ஒரு கவிதையை எழுதிக்கொண்டோ
ஒரு தூரிகையை நனைத்துக்கொண்டோ
ஒரு கல்லைத் தழுவிக்கொண்டோ
ஒரு பாடலைப் பாடிக்கொண்டோ
என்னைப்போல் இப்படித்தான்
தனிமையில் இருக்கும்
எல்லா கலைஞனும்
அழுது தீர்ப்பான் போல
அழகின் மீதும் இசையின் மீதும் வண்ணத்தின் மீதும்
மொழியின் மீதும்
காதலுறுவதால்
இதுதான் நடக்குமா?
காதலில் இன்பத்துக்கு இடமே இல்லையா? ●

**மௌனன் யாத்ரிகா** <mounancreater4@gmail.com>

# தக்ஷிலா ஸ்வர்ணமாலி கவிதைகள்





தமிழில்: எம்.ரிஷான் ஷெரீப்

1

படுக்கைக்கு நீ வந்த போது
கட்டிலிலிருந்து எழுந்த பலகைச் சத்தம்
எப்போதும் போலவே எழுப்பிவிட்டது என்னை
பாதி ராத்திரியில் அந்தச் சத்தம்

கடின வேலை செய்தே சொரசொரப்பான உனது கைகளால்
வருடிவிட்டாய் எனது உச்சந்தலையை

பேரூந்து மிதிபலகையில் நின்றவாறு நான் பயணிக்கையில்
அவ்வாறு பயணித்த அனுபவங்கள் எவ்வளவுதான் இருந்தபோதிலும்
எனது கால்கள் விறைத்துக்கொள்ளும்
அப்போதெல்லாம் உனது
சொரசொரப்பான கைகளைப் பற்றிக்கொள்ள முடிந்தால்
எவ்வளவு நன்றாக இருக்கும் என்று தோன்றிக் கொண்டேயிருக்கும்
உனது கைகளென எண்ணிக்கொண்டு
அலுமினியப் பிடியைப் பிடித்துக்கொள்வேன் எனினும்
அது மிகவும் வழுக்கும்

எனது நெற்றியில் முத்தமிட்டாய் மிகவும் மென்மையாக
எவ்விதப் பரபரப்பும் இருக்கவில்லை உன்னில்

ஓடியோடி விரைவாக நீ வந்திருந்தாய்
காரிருளில் சரளைக் கற்கள் நிறைந்த பாதையில்
பழகிய தடம் என்பதால் குழிகளை எளிதாகத் தாண்டிக் கடந்து



எவ்வளவுதான் அவசரமாக நீ வந்திருந்த போதிலும்
மிகவும் சாந்தமாகத்தான் படுக்கைக்கு வந்தாய்

'ஒரு மாசத்துக்கு ரெண்டு பால், மா பாக்கெட் போதுமாங்க?'
என்று கேட்டதும்
எனது கன்னத்தை முத்தமிட்டாய் நீ மிக மிருதுவாக

மூடியிருந்த எனது விழிகளுக்குள்
பல்லிளித்துக் கொண்டிருந்தார் கடை முதலாளி

முன்பை விடவும் மிகவும் மிருதுவாக
அடுத்த கன்னத்தையும் முத்தமிட்டாய் நீ
'தேயிலையும் சீக்கிரமாத் தீர்ந்திடுது' என்றேன்

நெற்றியை முத்தமிட்டாய் மீண்டும் நீ
கூந்தலினுள்ளே விரல்கள் நுழைத்துக் கோதிய வேளையில்
'மொன்டசூரிக்கும் இந்த மாசக் காசு கொடுக்கல இன்னும்'
என்றேன்

எனது உள்ளங்கால்களை அழுத்தி விடத் தொடங்கியிருந்த
நீ கேட்டாய்
'கணுக்கால் வலி இப்போது எப்படியிருக்கு என் அன்பே?'
'வலி இப்ப குறைவு' என்றேன்
ஆனாலும் வலி அப்படியேதான் எப்போதும் இருக்கிறது

இரண்டு கணுக்கால்களையும் முத்தமிட்டாய் நீ
அந்தக் கணத்தில்தான் எனதிரு விழிகளும்
மீளவும் சட்டென உறக்கத்தில் ஆழ்ந்தது

சரியாக நான்கு மணிக்கு எழுந்த அலாரம் ஓசைக்கு
மீண்டும் விழிப்பு வந்தது எனக்கு
உனதுமார்போடுஇறுக்கமாகஎன்னைச்சேர்த்தணைத்தவாறு
உறங்கிப் போயிருந்தாய் நீ

'நேற்று துவைக்க ஊறப் போட்ட துணி
வாளியில்அப்படியேகிடக்கிறது'எனத்தோன்றியவேளையில்
'தேங்காயெண்ணெய் வாங்கி வரக் காசிருக்கவில்லை என்
அன்பே' என்று
எப்போதும் குறைந்தளவே உறங்கும் நீ
பாதித் தூக்கத்தில் புலம்பிக் கொண்டிருந்தாய்

2

விடிகாலை இரண்டு மூன்று மணிக்கெல்லாம்
எனக்குக் கேட்கும்
குழாயிலிருந்து தண்ணீர் விழும் ஓசை
பாத்திரங்களோடு கரண்டி மோதும் ஓசை
வேக வேகமாகவும் பரபரப்பாகவும் நீ
சமையலறைக்குள் நடமாடும் ஓசை
விழிப்பும் உறக்கமுமாக படுக்கையில் கிடப்பேன் நான்

'நான் போயிட்டு வாறேன் ரவி
தேத்தண்ணி போத்தல்ல இருக்கு
ஊற்றிக் குடிங்க
உடுப்பெல்லாம் அயர்ன் பண்ணி வச்சிருக்கேன்
சப்பாத்துக்களையும் பாலிஷ் பண்ணிட்டேன்
நீங்க போறப்போ மகளை ஸ்கூல்ல விட்டுட்டுப் போங்க'

நீ வருவாய்
இரவாகி இருளை அழைத்துக்கொண்டு
நீ வருவாய்
சமைப்பாய்
ஒரு மூட்டைத் துணிகளை எடுத்துக்கொண்டு
கிணற்றடிக்குச் செல்வாய்
கழுவித் தோய்த்துப் பதற்றத்தோடு
அவசர அவசரமாகக் குளித்துக்கொள்வாய்

இன்னும் என்னவெல்லாமோ ஓசைகள் எனக்குக் கேட்கும்
நீ வந்து கட்டிலின் ஒரு ஓரமாக ஒடுங்கிப் படுத்துக்கொள்வது கேட்கும்
உனது குளிர்ந்த சுவாசம் எனது முதுகை நனைக்கையில்
எனது உஷ்ண மூச்சு பட்டு சுவர் எரியத் திரும்புவேன்

விவாகரத்து தீர்ப்பு கிடைத்த நாளில்
நீதிமன்றப் படியிறங்குகையில்
நான் கண்டேன் உனது கால்கள் தடுக்கியதை
உன்னைத் தாங்கிக்கொள்ள என்னையறியாமலே
அடியெடுத்து வைத்தேன் ஓரடி முன்னால்
எனதிரு கைகளும் நீண்டன உன்னை நோக்கி
எங்கிருந்தோ ஓடி வந்த மகள்
நீ விழாதிருக்க உனதிரு கைகளையும்
பற்றிக் கொள்வதைக் கண்டேன்
செல்ல முற்பட்ட நீ திரும்பிப் பார்த்து
மருந்து குடிக்க வேண்டிய நேரங்களை நினைவுபடுத்தி
'ஒழுங்கா நேரத்துக்கு மருந்து குடிங்க ரவி' என்று சொன்னாய்
நீதிமன்றத்தின் இறுதிப் படிக்கட்டில் நின்றவாறு

விடிகாலை இரண்டு மூன்று மணிக்கெல்லாம்
இப்போதும் சடுதியாக விழித்துக் கொள்கிறேன்
வீட்டுக்குள் நீ நடமாடும் ஓசை கேட்கும் எனத் தோன்றி

3

அதற்கு முன்பு
நீ மெதுவாகத்தான் நடந்தாய்
அதற்குப் பிறகு
மிக வேகமாக நடக்க உனக்கு நேர்ந்தது
அதற்கு முன்பு
நீ மெதுவாகத்தான் கதைத்தாய்
அதற்குப் பிறகு
மிக வேகமாகக் கதைக்க உனக்கு நேர்ந்தது
அதற்கு முன்பு
நீ சொற்பமாகத்தான் கதைத்தாய்
அதற்குப் பிறகு
மிக அதிகமாகக் கதைக்க உனக்கு நேர்ந்தது
அதற்கு முன்பு
நீ ஆழமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தாய்
அதற்குப் பிறகு
நீ குழம்பிப் போய் விழிகளில் எப்போதும் பதற்றத்தைக் கொண்டிருந்தாய்
அதற்கு முன்பு...
அதற்குப் பிறகு...
அதற்கு முன்பு...
அதற்குப் பிறகு...
அதற்கும் பிறகு
நீ நடப்பது நின்று போனது
நீ கதைப்பது நின்று போனது
நீ சுற்றி வர அவதானிப்பதுவும் நின்று போனது. ●

---

*தக்ஷிலா ஸ்வர்ணமாலி, இலங்கையைச் சேர்ந்த பெண் எழுத்தாளர், கவிஞர்; சமூகவியலில் முனைவர் பட்டம் பெற்றவர். பாடசாலை ஆசிரியையாக பணி புரிந்து வருகிறார். கவிதைத் தொகுப்புகள், சிறுகதைத் தொகுப்புகள், நாவல்கள், ஆய்வு நூல்கள் என இருபதுக்கும் மேற்பட்ட நூல்களை சிங்கள மொழியில் எழுதியுள்ளார். சிங்களத்தில் மூன்றாம் பாலினர் தொடர்பான ஆய்வுகளை மேற்கொண்டு அவர்களுக்கான முதல் நூலை எழுதிய எழுத்தாளர் இவராவார். இவரது படைப்புகள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு நூல்களாக வெளியாகியுள்ளன.*

# அம்ருதா பதிப்பகம் வெளியீடுகள்

முத்துக்கள் பத்து வரிசை நூல்கள்
சிறந்த எழுத்தாளர்களின் தேர்ந்தெடுத்த
10 சிறுகதைகள்

**பி. எஸ். ராமையா**
பக். 80, விலை ரூ. 50

**புதுமைப்பித்தன்**
பக். 48, விலை ரூ. 30

**ந. பிச்சமூர்த்தி**
பக். 80, விலை ரூ. 50

**எம். வி. வெங்கட்ராம்**
பக். 64, விலை ரூ. 50

**லா. ச. ரா**
பக். 80, விலை ரூ. 50

**கல்கி**
பக். 96, விலை ரூ. 60

**தி. ஜ. ர**
பக். 80, விலை ரூ. 50

**தி. ஜானகிராமன்**
பக். 96, விலை ரூ. 60

**ஜெயகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**கு. அழகிரிசாமி**
பக். 96, விலை ரூ. 60

**அசோகமித்திரன்**
பக். 64, விலை ரூ. 40

**சா. கந்தசாமி**
பக். 112, விலை ரூ. 70

**ஆ. மாதவன்**
பக். 80, விலை ரூ. 50

**ஆதவன்**
பக். 96, விலை ரூ. 60

**பிரமிள்**
பக். 96, விலை ரூ. 60

**வண்ணநிலவன்**
பக். 64, விலை ரூ. 40
**வண்ணதாசன்**
பக். 64, விலை ரூ. 40

**நாஞ்சில்நாடன்**
பக். 80, விலை ரூ. 50

**ராஜம் கிருஷ்ணன்**
பக். 112, விலை ரூ. 70

**விட்டல்ராவ்**
பக். 64, விலை ரூ. 40

**பா. செயப்பிரகாசம்**
பக். 160, விலை ரூ. 100

**நீல. பத்மநாபன்**
பக். 80, விலை ரூ. 50

**தமிழ்ச் செல்வன்**
பக். 64, விலை ரூ. 40

**கந்தர்வன்**
பக். 80, விலை ரூ. 50

**கோணங்கி**
பக். 64, விலை ரூ. 40

**சூர்யகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**ஜெயந்தன்**
பக். 160, விலை ரூ. 100

**மொழிபெயர்ப்பு நாவல்கள்**
**மிருகங்களின் பண்ணை**
ஜார்ஜ் ஆர்வெல்
பக். 120, விலை ரூ. 75

**பாரதிபுரம்**
யு.ஆர். அனந்தமூர்த்தி
தமிழில்: தி.சு. சதாசிவம்
பக். 240, விலை ரூ. 150

**பிறவாத குழந்தைக்கு ஒரு கடிதம்**
ஓரியானா ஃபேலஸி
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**பெண்ணே கேள்**
கிருஷ்ணா ஸோப்தி
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 112, விலை ரூ. 70
**சிதைந்தகூடு**
தாகூர்
பக். 80, விலை ரூ. 50

**நெருப்பு நிலா**
வாசி ரெட்டி சீதா தேவி
பக். 160, விலை ரூ. 100

**ஒரு லாரி டிரைவரின் கதை**
சிங்கிஸ் ஐத்மாத்தவ்
தமிழில்: தா. பாண்டியன்
பக். 128, விலை ரூ. 80

**மாயாபுராணம்**
பி. சுரேந்திரன்
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**மொழிபெயர்ப்பு சிறுகதைகள்**
**சல்வடார் டாலி**
உலகச் சிறுகதைகள்
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 192, விலை ரூ. 120

**குதிரில் உறங்கும் இருள்**
பாப்லோ நெருடா
பக். 112, விலை ரூ. 70

**ஒரு வார்த்தையின் பொருள்**
ப்ரஃபுல்லா ராய்
வங்காளத்தில் இருந்து: புவனா நடராஜன்
பக். 224, விலை ரூ. 140

**அண்மைக்காலவங்காளச்சிறுகதைகள்**
தமிழில்: சு. கிருஷ்ணமூர்த்தி
பக். 240, விலை ரூ. 150

**அன்புள்ள பிலாத்துவுக்கு**
பால் சக்கரியா. தமிழில்: திலகவதி
பக். 96, விலை ரூ. 60

**யௌவனத்தின் கடல்**
நவீன மலையாள சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: குளச்சல் மு. யூசுப்
பக். 288, விலை ரூ. 180

**உள்ளுக்குள் ஓடும் ஆறு**
வடகிழக்கு இந்திய சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: வெ. இன்சுவை
பக். 144, விலை ரூ. 90

**மண்வாசல்**
பிரேம்சந்த்
தமிழில்: ரமேஷ்குமார்
பக். 96, விலை ரூ. 60

**சிறுகதைகள்**
**சித்திரக்கூடம்**
லஷ்மி மணிவண்ணன்
பக். 128, விலை ரூ. 80

**அன்னை தந்த ஒளி**
பெ. தூரன்
பக். 80, விலை ரூ. 50

**அறிஞர் அண்ணா சிறுகதைகள்**
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 160, விலை ரூ. 100

**அவள் அதுவானாள்**
பா. விசாலம்
பக். 80, விலை ரூ. 50

**வான்கோவின் காது**
கீதாஞ்சலி
பக். 112, விலை ரூ. 70

**பழைய காலண்டரில் இருதினங்கள்**
பாலு சத்யா
பக். 128, விலை ரூ. 80

**மீண்டெழுதல்**
இல. வின்செண்ட்
பக். 128, விலை ரூ. 80

**வண்ணத்துப் பூச்சிகளும் பெண்களும்**
சூர்யகுமாரன்
பக். 120, விலை ரூ. 75

**நாவல்**
**சுகுண சுந்தரி சரித்திரம்**
வேதநாயகம் பிள்ளை
பக். 112, விலை ரூ. 70
**முள்ளும் மலரும்**
உமா சந்திரன்
பக். 288, விலை ரூ. 180

**டணாயக்கன் கோட்டை**
இ. பாலகிருஷ்ணநாயுடு
பக். 480, விலை ரூ. 300

**அசன்பே சரித்திரம்**
எம்.சி. சித்திலெவ்வை
பக். 128, விலை ரூ. 80

**ஓடும் நதி**
சுப்ரபாரதிமணியன்
பக். 240, விலை ரூ. 150

**சாகசப் பறவைகள்**
எஸ்ஸாரெஸ்
பக். 180, விலை ரூ. 90

**கட்டுரைகள்**
**இந்தியா - மர்மமும் சவாலும்**
இ.எம். பாஸ்டர்
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 192, விலை ரூ. 120

**உலகை மாற்றிய புத்தகங்கள்**
ராபர்ட் டவுன்ஸ்
பக். 240, விலை ரூ. 150

**ஜெயகாந்தன் சிந்தனைகள்**
தேர்வும் தொகுப்பு: திலகவதி
பக். 112, விலை ரூ. 70

**தமிழகக் கோட்டைகள்**
விட்டல்ராவ்
பக். 240, விலை ரூ. 150

**என் பார்வையில் படைப்பிலக்கியம்**
முருகேச பாண்டியன்
பக். 240, விலை ரூ. 150

**என்றென்றும் வாழும் படைப்புகளும் படைப்பாளர்களும்**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

**மூச்சுத் திணறுது பூமி**
மருத்துவர் வி. ஜீவானந்தம்
பக். 120, விலை ரூ. 75

**பெண்ணொன்று கண்டேன்**
பாமரன்
பக். 112, விலை ரூ. 70

**ஆரிய உதடுகள் உன்னது**
பாமரன்
பக். 64, விலை ரூ. 40

**சொல்லப்படாத உலகம்**
யமுனா ராஜேந்திரன்
பக். 96, விலை ரூ. 60

**பாலமாகி நிற்கும் பணி**
யமுனா ராஜேந்திரன்
பக். 160, விலை ரூ. 100

**ஈழத்து அரசியல் நாவல்**
யமுனா ராஜேந்திரன்
பக். 112, விலை ரூ. 70

**திரைப்படங்களான இலக்கியங்களும் நாடகங்களும்**
அறந்தை மணியன்
பக். 128, விலை ரூ. 80

**திரைவெளி**
சுப்ரபாரதிமணியன்
பக். 128, விலை ரூ. 80

**அசோகமித்திரன் 77**
சுப்ரபாரதிமணியன்
பக். 144, விலை ரூ. 90

**நெஞ்சு பொறுக்குதில்லையே**
சாவித்திரி கண்ணன்
பக். 192, விலை ரூ. 120

**கிட்டத்தட்ட கடவுள்**
சி. சரவணகார்த்தியேன்
பக். 154, விலை ரூ. 135

**பாம்பின் கால்த்தடம்**
பிரபு திலக்
பக். 200, விலை ரூ. 125

**பறை**
மருத்துவர் எம். வளர்மதி
பக். 144, விலை ரூ. 90

**தமிழ்ச் சூழலில் அறிவியல் புதினங்கள்**
நெல்லை சு. முத்து
பக். 192, விலை ரூ. 120

**மிக அருகில் மிருகம்**
மருத்துவர் ஆர். கோவிந்தராஜ்
பக். 128, விலை ரூ. 80

**கவிதை**
**விக்ரமாதித்யன் கவிதைகள்**
தேர்வும் தொகுப்பும்: வித்யாஷங்கர்
பக். 560, விலை ரூ. 350

**சொட்டுச் சொட்டாய் விழுகின்றன செவ்வரளிப் பூக்கள்**
என்.டி. ராஜ்குமார்
பக். 80, விலை ரூ. 50

**காதலியர் மேன்மை**
தபசி
பக். 160, விலை ரூ. 100

**திரைக்கதை**
**இம்சை அரசன் 23ஆம் புலிகேசி**
சிம்பு தேவன்
பக். 160, விலை ரூ. 100

**ஆட்டோகிராப்**
சேரன்
பக். 208, விலை ரூ. 130

**நாடகம்**
**முன்மேடை**
அ. ராமசாமி
பக். 144, விலை ரூ. 90

**கள்ளத் தோணி**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

**வாழ்க்கை வரலாறு**
**பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு**
ஏ.எல். நடராஜன்
பக். 240, விலை ரூ. 150

**சுய முன்னேற்றம்**
**வாழ்க்கை வாழ்வதற்கே**
மருத்துவர் திருநாவுக்கரசு
பக். 160, விலை: ரூ. 210

**மனம்**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 112, விலை ரூ. 70

**போதை?**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 160, விலை ரூ. 100

**வெற்றிப்பாதை**
சுரேஷ்குமார்
பக். 128, விலை ரூ. 80

## திலகவதி நூல்கள்

**கல்மரம்**
சாகித்திய அகாதமி விருது பெற்ற நாவல்
பக். 96, விலை ரூ. 60

**உனக்காகவா நான்**
நாவல்
பக். 80, விலை ரூ. 50

**நேசத்துணை**
நாவல்
பக். 128, விலை ரூ. 80

**சொப்பன பூமியில்**
நாவல்
பக். 104, விலை ரூ. 65

**தமிழ்க் கொடியின் காதல்**
நாவல்
பக். 144, விலை ரூ. 90

**மூங்கில் திரை**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**மரப்பாலம்**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

## முத்துக்கள் பத்து
சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தீப்பறவையின் கூடு**
சிறுகதைகள்
பக். 186, விலை ரூ. 120

**சக்கர வியூகம்**
சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தொப்புள் கொடி**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**உங்களுக்காக உலக சினிமா**
கட்டுரைகள்
பக். 360, விலை ரூ. 225

**காலந்தோறும் அறம்**
கட்டுரைகள்
பக். 96, விலை ரூ. 60

**நபி (ஸல்) நமக்குச் சொன்னவை**
கட்டுரைகள்
பக். 120, விலை ரூ. 75

**சேகுவேரா**
வாழ்க்கை வரலாறு
பக். 80, விலை ரூ. 50

**முடிவெடு**
சுய முன்னேற்ற நூல்
பக். 144, விலை ரூ. 90

**இப்படித்தான் வென்றார்கள்**
கேள்வி-பதில்கள்
பக். 208 , விலை ரூ. 130

**காலத்தின் கண்ணாடி**
தொகுப்பு நூல்
பக். 1200, விலை ரூ. 750

**கோடை உமிழும் குரல்**
தொகுப்பு நூல்
பக். 400, விலை ரூ. 250

---

நூல்களை பெற +91 94440 70000 என்ற எண்ணுக்கு அழைக்கவும். அல்லது குறுஞ்செய்தி / வாட்ஸ் அப் செய்தி அனுப்பினால் நாங்கள் தொடர்புகொள்கிறோம். info.amrudha@gmail.com மின்னஞ்சல் முகவரி மூலமாகவும் தொடர்புகொள்ளலாம்.

அம்ருதா சந்தாதாரர்கள் நூல்களை 60% விலை குறைப்பில் பெற்றுக்கொள்ளலாம்.

நூல்களை சென்னை அம்ருதா அலுவலகத்திலும் புத்தகக் காட்சிகளில் அம்ருதா ஸ்டால்களிலும் நேரிலும் பெற்றுக்கொள்ளலாம்.

---

**அம்ருதா, 1 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு, மூன்றாவது பிரதான சாலை, சிஐடி நகர் கிழக்கு, நந்தனம், சென்னை - 600035**

# நல்லதங்காள் நாடகம்



ராம் முரளி
ஓவியம்: சத்யபிரதா கர்மாகர்

அஞ்சலை அந்த பிழைப்பை வெகு சீக்கிரத்திலேயே கைக்கொண்டு விட்டாள். சிறிது நேர உழைப்புதான் என்றாலும், அதன் மீதிருந்த சாகச கிளர்ச்சி அவளைப் பெரிதும் கவர்ந்து விட்டிருந்தது.

அந்தத் தெருவில் அத்தனையொன்றும் வீடுகள் இல்லை. இப்போது மூன்றிலோ நான்கிலோதான் ஆட்கள் இருக்கிறார்கள். மற்றகளிலெல்லாம் இடிந்த சுவர்களின் பாகங்களும் எருக்கஞ் செடிகளும் சாய்வான தென்னை மரங்களும் காட்டாமணி இலைகளும்தான் அவ்விடத்தில் எஞ்சி இருக்கின்றன. முன்பு இங்கு மக்கள் வசித்திருந்தார்கள். தெருவேகூட பத்துவருடங்களுக்கு முன்னால் கலகலவென்றுதான் எப்போதும்காட்சியளிக்கும். நடை வியாபாரிகள் எவரொருவரும் அந்தத் தெருவில் கால் பதியாமல் தமது வியாபாரத்தை நிவர்த்திச் செய்துக்கொண்டு திரும்ப மாட்டார்கள். தெருமுனையில் ஒரு சர்ச்சும் அதிலிருந்து ஒலிக்கவிடப்படும் ‘அல்லேலூயா’ ஸ்லோகங்களும் எதிரொலித்தது வெகு சமீபத்தில்தான்.

அந்த தெருவின் ஞாபகங்களை அசைபோட்டபடியே, மிஞ்சியிருக்கும் மூன்றோ நான்கோ வீடுகளும் ஏக்கப்பெருமூச்சு விடுகின்றன. நிலக்கரி சுரங்க விரிவாக்க பணியின் காரணமாக, இயக்கம் பெற்றிருந்த அனைத்தும் இப்போது பெரும் பள்ளத்துக்குள் புதைந்துவிட்டன. இப்போது நிலக்கரி வெட்டும், பிரமாண்ட குழியாக தென்படும் அவ்விடத்தில்கூட முன்பு பற்பல வீடுகளும் பள்ளிகளும் பூங்காக்களும் கடை வீதிகளும் மைதானங்களும் தொழிற் கட்டிடங்களும் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்தன. என்றாவதொரு நாளில் அத் தெருக்களின் ஞாபகங்களும் உருதிரண்டு கரிய நிலக்கரி உருண்டைகளாக மண்ணிலிருந்து பிதுங்கி வெளிக் கிளம்பி வரும்.

காலனியாக இருந்த அப்பகுதி, இப்போது ஒற்றைத் தெருவுக்குள் மூன்று நான்கு வீடுகளை மட்டுமே தம்முடையதாய் வெளிக்காட்டியபடி, தனது அந்திமகால மூச்சுத் திணறலைச்

சீராக வெளியேற்றிக் கொண்டிருக்கின்றன.

அஞ்சலைக் கிழவி தள்ளாடிய படியே அந்தத் தெருவை நோக்கி நடைபோட்டுக் கொண்டிருந்தாள். அவளது உடல் நிதான வேகத்தில் அந்த இரவிற்குள் இறங்கி அசைந்து கொண்டிருந்தது. நிலம் முழுக்க கரியக் கோடுகள்தான். அவளது உடல் அந்த கருவேலங்காட்டின் சிறு வெளிச்சமும் இல்லாத மண் வளைவாலான பாதையில் ஒரு பேயாட்டம் மிதந்து கொண்டிருந்தது. வெண்மையுடன் பிணைந்த அவளது கரிய மயிர்கள் வறண்டு தோள்பட்டை வரையிலும் தொங்கியபடி இருந்தன. தெருவே ஒரு பாழ்வெளி என்றால், கிழவி அதன் கிணற்றினடியாழத்துக்கு இப்போது பயணப்படுகிறாள்.

தொலைவு என்பது அவளது பழுத்து வீங்கிய கண்களுக்கு எப்போதுமே பழக்கப்பட்டதுதான். என்றாலும், அந்தச் சிறிய மண்பாதையில், பதினைந்து அடி தூரத்திற்கு அப்பால், மஞ்சள் நிறத்தை இருளின் மீது சிதறடித்து, ஒளியுமிழும் வீட்டின் வெளிப்புறத்தையும் அவள் கடந்த காலத்திலிருக்கும் இடமென்றே கருதினாள். அதனாலேயே, அவளால் அந்த பதினைந்தடி தொலைவை அவ்வளவு எளிதில் கடந்துவிட முடியாமல் ஆக்கிவிட்டிருந்தது.

அஞ்சலை நிலைத்ததொரு இடத்தின் சூழலிலேயே சிக்குண்டிருந்தவளாக, ஸ்டாண்ட் விடுவிக்கப்படாத சைக்கிள் ஒன்றின் மேலமர்ந்து பெடலை மிதித்து சுழற்றும் மதிகெட்டவனைப்போல, தன் காலத்தை அப்படியே தன் முன்னால் இருக்கின்ற இடத்திற்கு விட்டுக்கொடுக்க மனமில்லாதவளாக, அவ்விடத்திலேயே கழித்துக்கொண்டிருந்தாள்.

உண்மையில், அவளது கால்கள் மரத்துதான் போயிருந்தன. அல்லது வறண்ட அந்நிலத்தின் வெடிப்பு அவள் கால்களில் ஏறியிருந்தது. எத்தனையோ இரவுகளை இதே மண்பாதையில் இறங்கி, தீராத் தள்ளாட்டத்தில் அவள் நடந்திருப்பாள். சிறுமியாக, இளையவளாக, மணப்பெண்ணாக, பிள்ளைப் பெற்ற தாயாக, மத்திம வயதுடையவளாக, இப்போது பேரப்பிள்ளைகளை ஈன்றெடுத்துவிட்ட பழங்கிழவியாக அவள் நடந்து கொண்டிருக்கிறாள். அந்தத் தெருவிற்கும் கிழவிக்கும் சற்றேறக்குரிய சமவயதுதான். பூதகையைப்போல, முன்பு அங்கிருந்த அத்தனை அத்தனை ஜனங்களையும் விழுங்கிய ஒரு பூத உடல்தான் அஞ்சலை எனும் உருவில் நடமாடுகிறதோ எனும்படி, அவளது ஞாபகக் கோடுகளில் அந்த நிலப்பகுதியின் குரலொலிகள் நிரம்பி இரைச்சல் கிளர்த்தியபடியே இருக்கின்றன. தெருவின் உலர்ந்துபோன ஞாபகக் கிறுக்கல்கள் ஒரு பழம் போர்வையாக மாறி கிழவின் உருவில் படிந்துவிட்டிருக்கிறது. ஒரு சாயலுக்கு அவள் அந்த முழு நிலமும்தான்.

கிழவிக்கு முன்காலங்களில், ஊர் பெண்கள், 'குண்டு அஞ்சலை' என்று பெயர் வைத்திருந்தார்கள். முழு இளமையில் தெனவான உடல்வாகு அவளுக்கு. இப்போது, எல்லாம் பழங்கதையாகிவிட்டது. பருத்த அவளது உடல் ஒடுங்கி ஒடுங்கி, இப்போது காற்றில் ஒரு ஆவிப் படலத்தைப் போலத்தான் அவள் அசைவுக்கொண்டிருக்கிறாள். கிழவிக்கு உடலில் வலுவில்லை. தோள்கள் வெதும்பி சதைத் திரட்சிகளாக உருவில் பிதுங்கித் தொங்குகின்றன. அவளது மயிர்கள் வறண்டு வெண்மை ஏறியிருக்கிறது. கால்கள் சற்றே பருமனான மூங்கில் கழிகளைப்போல குச்சியாட்டம் தரையில் கோடுகளை கிறுக்குகின்றன. அஞ்சலை தனதுடலை நகர்த்தியபடியே, கடந்த காலமாக்கப்பட்ட, அந்தத் தெருவில் எஞ்சியிருக்கும் தனது மகனின் குடும்பம் வசிக்கும் அவளது வீட்டிற்கு சென்றுகொண்டிருந்தாள்.

மகனது குடும்பத்தில் அப்படியொன்றும் பிரமாதமான வரவேற்பு அவளுக்குக் கிடைத்துவிடப் போவதில்லை. இந்த விஷயத்தில் எல்லா பழங்கிழவிகளின் கதையைப் போலத்தான் அவளுடையதும். அவற்றை எதிர்பார்க்கின்ற நிலையிலும் அவள் இல்லை. கணவனின் மூச்சு அடங்கிய தினத்தோடு வாழ்க்கை மீதான அவளது அத்தனை எதிர்பார்ப்புகளும் உலர்ந்து போயிருந்தது. தரையில் உட்காரும்போதுகூட தன் அனுமதியை எதிர்பார்த்து நின்ற அவளது மருமகள், இப்போது இரவு முழுக்க குரல் கொடுத்தாலும் என்ன ஏதென்று அருகில் வந்து கேட்கமாட்டாள். மனித உடலையும் வாழ்நாளையும் ஒருகதியில் நிலைத்திருக்க அனுமதிக்காமல், தன்னிஷ்டம்போல சிதைத்தும் உருமாற்றியும் விளையாடும் காலம்தான் எத்தனை கொடுமையானது. அஞ்சலை இன்னமும் தொடர்ச்சியாகப் பிள்ளை வீட்டிற்கு போய்க்கொண்டிருப்பதுகூட ஒரு பழக்கத்தினால்தான். அதுவும் இரவில் சற்று நேரம் பேரப்பிள்ளைகளுடன் பேசி விளையாடுவதும் கதைகள் சொல்வதும் சுவாரஸ்யத்தைக் கொடுத்துக் கொண்டிருப்பதால்தான். கையில் சிறிதே இனிப்பு பூந்தியை வாங்கிச் சென்று, பிள்ளைகளின் கைகளில் சேர்க்கையில் அவர்கள் அடைகின்ற ஆனந்தத்தைப் பார்ப்பது அவளது அலாதி சுகங்களில் ஒன்று.

பேருந்து நிலையத்தில் எத்தனையோ கிழவிகள் இரவை கடத்துகிறார்கள். எப்போதாவது குடிகாரர்கள், கலங்கிய மனம் கொண்டவர்களால் தொந்தரவு ஏற்படும்தான். என்றாலும் தன் பழுதுடலை இனியும் சீந்துவார் எவரும் இருக்கப்போவதில்லை என்பதை அவள் அறிந்தே வைத்திருந்தாள். நாளாக, நாளாக, அவளது உடலே அவளுக்கு பெருஞ்சுமையாக தோன்ற ஆரம்பித்துவிட்டது.

மருமகளிடத்தில் வாய் தகராறு எதுவும் அவளுக்கு இல்லை. எனினும், அவளது வருகை அவளுக்கு ஏனோ பிடிக்கவில்லை என்பதுபோலத்தான் தெரிகிறது. ஊரெல்லாம் மேய்ந்துவிட்டு, இரவில், தனது கூட்டிற்குள் அடையும் கோழியைப்போல,

அவள் திரும்பி வீடு வருகையில், அவளுக்கென்று ஒதுக்கப்பட்டிருக்கும் சில்வர் பாத்திரத்தில் சிறிது சாதமும் குழம்பும் போட்டு புளியமரத்தினடியில் மருமகள் வைத்துவிடுவாள். சில நாட்களில் அதற்கும்கூட குரல்கொடுத்தபடியே இருக்கவேண்டும். நேரடியாக வாய்விட்டு சோறு என்று கேட்டுவிட முடியாது என்பதால், நாசூக்காக பேரப்பிள்ளைகளை அழைப்பதைப்போலத் தனது இருப்பை அங்குப் பதிவு செய்ய வேண்டும். இப்படியாகத்தான் கிழவியின் தினசரிகள் கடக்கின்றன.

இரவில் புளியமரத்தினடியில் அமர்ந்தபடியே, அந்தத் தெருக் குறித்த தனது ஞாபகங்களை அசைபோடுவதன் மூலமாக, அங்கிருந்து இடம்பெயர்ந்து சென்ற மனிதர்களை நினைவிலிருந்து கிளர்த்திவிட்டு, அவர்களுடன் தன் இன்றைய நாள் சம்பவங்களை விவரித்துக்கொண்டிருப்பது அவளுக்கு வழக்கமாகவே ஆகிவிட்டிருந்தது. அவள் சிரிப்பாள், வெம்பி அழுவாள், ரகசிய முணுமுணுப்பைப்போல ஏதோவொரு முன்காலத்தின் கதையை எச்சில் ஒழுக சொல்லிக்கொண்டிருப்பாள்.

இந்த பாசாங்குகளும் அமளிதுமளியும் போதாதென்று. சமீபத்தில், கிழவி உட்கார்ந்து உடல் சரிக்கும் அதே புளியமரத்தினடியில் குரங்கு ஒன்றை வேறு பிடித்து வந்து கட்டிவிட்டார்கள். அதுவும் சாதாரண குரங்கா அது? வாழ்வுக்கும் சாவுக்குமிடையிலான அவஸ்தையை நொடிதோறும் வெளிப்படுத்தும் ஒரு மாயக் குரங்கு.

கிழவி கதைக்கு ஒரு இளைப்பாறலைக் கொடுத்துவிட்டு குரங்கின் கதையைச் சற்றே மேலெழுந்தவாரியாகப் பார்த்துவிட்டு திரும்பலாம்.

சமீப காலத்திற்கு முன்பு, விருச்சாத்தலத்தில் இருந்து தொழுதூர் செல்லும் சாலையில் ஏராளமாக சுற்றிந்த குரங்களில் சில, ஒரு இரவில் அவ்வழியே பயணம் செய்த லாரியினால் ஏற்றப்பட்டு, கொல்லப்பட்டன. எப்போதுமே தொலைவில் இருட்டின் மீது வெளிச்சம் படிகின்ற தருணத்தில் சாலையில் இருந்து நழுவிவிடும் குரங்கள், சாலையின் ஓரமாக பலகாலமாக வீற்றிருந்த மரங்கள் வெட்டப்பட்ட ஒரு தினத்தில், ஏதோவொரு தற்கண மறதியாலோ இன்னமும் மரங்கள் இருக்கின்றன என்ற நினைப்பினாலோ குறுக்கும் நெடுக்குமாக அலைந்து அவதியுற்று கொண்டிருந்தன. ஆளரவமற்ற இருளில் அதீதவேகத்தில் காற்றைக் கிழித்துக்கொண்டு செல்லும் லாரிகளின் வெளிச்ச கண்களுக்கு குரங்களின் இருப்பு தென்படவேயில்லை.

காலையில்தான் சாலையோரமாக கோரவுருவில், உடல் நசுங்கி மரணித்துக் கிடந்த ஏழு குரங்குகளை ஊர்வாசிகள் பார்த்தார்கள். அவர்களது மனதில் பெரும் குற்றவுணர்வும் பரிதாப உணர்ச்சியும் பொங்கி எழுந்தது. குரங்களின் இறப்பை பெரும் பாவமாக கருதி, சாலையோரமாகவே, நிலத்தில் பெரும் பள்ளம் தோண்டி அந்தக் குரங்களை அவ்வூர் மக்கள் புதைத்தார்கள். அதோடு, புதைமேட்டின் மீது சிறியளவில் ஒரு கோவிலையும் கட்டி எழுப்பினார்கள். 'அனுமார் கோவில்' என்று நாட்போக்கில் அவ்விடம் பிரசித்தி பெற்று அழைக்கப்பட்டு வருகிறது. வழிபாடும் அங்கு இப்போது விசேசமாக நடைபெற்று வருகிறது.

**அவனது கனவின் பயனாகவே அல்லது கனவிலிருந்து பிதுங்கியே அங்குக் குரங்கு கோவில் உருவாகியிருக்கிறது என்றும் அக்கோவில் பூசாரி கோலத்திலிருந்த ஒருவர் கிருஷ்ணமூர்த்தியிடம் சாராயத்தை அருந்தியபடியே கதைப் பகிர்ந்துகொண்டார்.**

செத்த குரங்களுக்கிடையில், தனது கால்களில் பலத்த இரத்தக் காயங்களுடன் அன்றைய இரவு காட்டுக்குள் தப்பியோடிய குரங்கொன்று, அவ்வப்போது இரவுகளில் அந்தச் சிறு கோ யிலைச் சுற்றி வட்டமடித்துக் கொண்டிருப்பதை சில நாட்களுக்குப் பின்பே ஊர் மக்கள் தெரிந்துகொண்டார்கள். அவர்களுக்குத் துக்கம் தாள முடியவில்லை. விரட்டவும் முடியாமல் அதன் இருப்பு கொடுக்கும் அவஸ்தையைக் கடக்கவும் முடியாமல், ரண வேதனையை அனுபவித்தபடியே சிலகாலம் நகர்ந்துகொண்டிருந்தது.

அஞ்சலையின் சம்பந்தியான கிருஷ்ணமூர்த்தி நெய்வேலியில் பலூன் வியாபாரம் செய்து வருபவர். அவரது மகளைத்தான், அஞ்சலையின் மகன் திருமணம் முடித்திருக்கிறான். அவர் அவ்வப்போது விருச்சாத்தலம் பக்கம் தனது விற்பனைக்குத் தேவையான பண்டம் பாத்திரங்களை, விளையாட்டு சொப்புகளை வாங்கி வர செல்வது வழக்கமாக இருந்தது. அப்படி அங்கு சென்ற ஒரு தினத்தில்தான் குரங்குகளின் மரணம் பற்றிய செய்தியையும் அது இப்போது அனுமார் வழிபாட்டுத் தலமாக மாறி யிருப்பதையும் கேள்விப்பட்டு அவ்விடத்திற்குச் சென்றார். போனவருக்கு ஆச்சர்யங்கள் பலமாகவே இருந்தன.

குரங்களின் மரண சம்பவம் நேர்வதற்கு பலவருடங்களுக்கு முன்னதாகவே, அவ்வூரில் ஒருவன் குரங்கு கோவில் குறித்து கனவு கண்டதாகவும் அதனை அவ்வூர் மக்களிடம் சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் தெரிவித்து வந்ததாகவும் அவனது கனவின் பயனாகவே அல்லது கனவிலிருந்து பிதுங்கியே அங்குக் குரங்கு கோவில் உருவாகி யிருக்கிறது என்றும் அக்கோவில் பூசாரி கோலத் திலிருந்த ஒருவர் கிருஷ்ணமூர்த்தியிடம் சாராயத்தை அருந்தியபடியே கதைப் பகிர்ந்துகொண்டார். அது அவரை கிறக்கத்தில் ஆழ்த்தியது. கூடவே பூசாரி, அந்த

கனவின் எச்சங்கள் இன்னமும் இரவில் காலறுந்த ஒரு குரங்கின் வடிவத்தில் அந்தக் கோவிலையே சுற்றிச் சுற்றி வருகிறது, உண்மையில் அந்த கனவுகளின் ரூபமான அந்த குரங்களின் புதைமேட்டினடியில் புதைந்திருக்க வேண்டிய ஒன்றேதான் அதுவும் என்றும் தெரிவித்தார்.

கிருஷ்ணமூர்த்தியை இவையெல்லாம் மேலும் மேலும் ஆச்சரியத்தில் மூழ்கடித்தன. அவரது மனைவி கருவிலேயே பலக் குழந்தைகளை பறிகொடுத்தவள். அவர் வசித்துவந்த பனந்தோப்பு ஊரில் இதனாலேயே பழிக்கப்பட்டு துரதிர்ஷ்டசாலி என்று அழைக்கப்பட்டவர். தன் வாழ்நாளில் அவர் முயன்று பார்த்ததெல்லாம் பெருந்தோல்வியாகவே முடிந்திருக்கிறது. பலூனில் குரங்கின் வடிவத்தை உருவாக்கி சிறுவர்களின் கரங்களில் அதனைச் சேர்த்தவர். வயோதிகம் ஏற ஏற துக்க உணர்ச்சியும் தனது அனாதை கோலமும் அவரை சிறியளவில் நடுங்கவே செய்தது. குடிபோதையில் முன்பெல்லாம் தன்னையே சிவனின் அவதாரம் என்றும் உலகத்தில் முளைக்கவும் இறக்கவும் செய்கின்ற அனைத்து உயிர்களின் வாழ்வு ரேகையும் தன்னில் பதிந்திருப்பதாகவும் பிதற்றி, எல்லோரையும் வம்புக்கு இழுக்கும் கிருஷ்ணமூர்த்தி, இப்போது பலத்த துரதிர்ஷ்டசாலியாக, எஞ்சியிருக்கும் தனது வாழ்வின் ஒவ்வொரு கணத்தையும் கையிலிருந்து நழுவ விட்டுக்கொண்டிருப்பவராக இருந்தார். அதனாலேயே, ஏனோ இரவில் அலையும் நொண்டி குரங்கு தனது அதிர்ஷ்டத்தைத் திருப்பி கொண்டுவந்து தரும் என்று அவர் கருதினார். குரங்கின் வருகை சிறு ஒத்தடமாக மலரும் எனும் நம்பிக்கை திடீரென அவருள் எழுந்திருந்தது. மாலையில் தனது வியாபாரத்திற்குத் தேவையான பொருட்களை வாங்கி முடித்தவர், பூசாரியுடன் சேர்ந்துகொண்டு கோவிலிலேயே இரவு காத்திருக்க தொடங்கினார்.

இருளே வனமாக, அன்றைய பொழுது நிலமெங்கும் தன் உடலை விரைத்தது. ஆங்காங்கே காற்றில் அசையும் இலைகளின் எதிர்வுகள் மட்டும்தான் கண்ணில் அகப்பட்டன. வெளிச்சம் அவ்விடத்தில் சொட்டும் இல்லை. இருளுக்குள் பூசாரியும் கிருஷ்ணமூர்த்தியும் காத்திருந்தார்கள். நள்ளிரவுக்கு பின்பான பொழுதில், தத்தித் தாவி அனுமார் கோவிலை நெருங்கி வந்தது காயம்பட்ட குரங்கு. அதன் தோற்றம் வியப்பையும் மீறி பரிதாபத்தையே கிருஷ்ணமூர்த்திக்கு உண்டாக்கியது. ஒருகையை நெஞ்சோடு மடித்தபடி, பிடிமானம் இல்லாமல் அந்தரத்தில் கயிறு கட்டி நடக்கும் ஒரு சிறிதுயிரைப்போல, அது அத்தனை இரக்கத்தையும் கோரும்விதமாக அசைந்து நெருங்கியது. கிருஷ்ணமூர்த்தியின் கண்களில் திடுமென கண்ணீர் உருண்டு விழுந்தது. பூசாரியின் கரம்பற்றி வணங்கினார்.

எந்தவொரு ரணப் போராட்டங்களுமின்றி குரங்கு கிருஷ்ணமூர்த்தியின் பிடிக்குள் வந்து அகப்பட்டது. இரவோடு இரவாக அவரது சைக்கிள், குரங்கை முன்னால் அமர்த்தி வைத்துக்கொண்டு, பனந்தோப்பை நோக்கி விரைந்தது.

விடிந்ததும் அவரது குடிசையின் முன்னால் பெரும் கூட்டம் கூடிவிட்டது. எங்கெங்கிருந்தோ மக்கள் அங்கு வந்து, குரங்கைப் பார்த்துச் சென்றார்கள். கிருஷ்ணமூர்த்தி, அதன் பூர்வ கதையை எவரிடத்திலும் பகிர்ந்துகொள்ளவில்லை. முன்பே, இராசியற்றவர் எனப் பெயரெடுத்திருக்கும் கிருஷ்ணமூர்த்தி, கடவுளாகும் சந்தர்ப்பத்தை நொடியில் நழுவவிட்ட, அந்தக் குரங்கை அங்குக் கொண்டு வந்திருப்பது தெரிந்தால், மேலும் மேலும் அவரது குடிசையின் மீது ஏச்சுப்பேச்சுகள் வீசப்படும் என்பதை அறிந்திருந்தார்.

பேருந்து நிலையத்தில் பலூன் தட்டியைக் கொண்டுபோய் இறக்கும்போது, அருகிலேயே குரங்கையும் அவர் அதில் ஒருமுனையில் கட்டி வைத்துவிடுவார். குரங்கைப் பார்க்க வேண்டும் என்கிற ஆர்வமும் அவ்விடத்திற்கு நிறைய நபர்களை அழைத்துக்கொண்டு வந்திருந்தது. வியாபாரமும் சூடுப் பிடித்தது.

கிருஷ்ணமூர்த்தியின் நிழல்போலவே, அவர் செல்லுகின்ற இடத்திற்கெல்லாம் குரங்கும் செல்லும். சைக்கிளில் முன்கம்பியில் அதனை அமர்த்திக்கொண்டு, அய்யனார் ஏரி வரையில் இருவரும் சென்று திரும்புவார்கள். கிருஷ்ணமூர்த்தியின் முதுகின் மீது அமர்ந்துகொண்டு, நீச்சலும் புரியும். கிருஷ்ணமூர்த்தியும் அந்த குரங்கும் ஆட்களற்ற தங்களது குடிசையின் ஒற்றை உயிரசைவின் இரு உடலாக வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார்கள். ஆனால், சீக்கிரத்திலேயே வந்தது வினை.

விருத்தாசல பூசாரி ஒருநாள் கிருஷ்ணமூர்த்தியைத் தேடிக்கொண்டு பனந்தோப்புக்கு வந்துவிட்டார். அவரது பார்வை பொலிவிழந்து, கருமைப் படிந்திருந்தது. அவரால் நிதானமாக இருக்க முடியவில்லை. கிருஷ்ணமூர்த்தியின் குடிசை வாசலில் அமர்ந்தபடியே, அங்கு ஒரு மரக் குச்சியில் கட்டப்பட்டிருந்த குரங்கை அவ்வப்போது பார்வையுயர்த்திப் பார்த்தபடியே பேசினார். குரங்கை அவர் கொடுத்துவிட்ட தினத்திற்கு பிறகிலிருந்தே, கனவுகளில் அந்த ஏழு குரங்களும் தன்னை விரட்டி வந்து பிறாண்டுகின்றன என்றும், விழிப்புகொண்டு முழித்துப் பார்க்கையில் தனது ஸ்தூல உருவில் காயங்கள் படிந்துவிடுகின்றன என்றும் சட்டையை விலக்கிவிட்டு, வெற்றுடலை கிருஷ்ணமூர்த்தியிடம் காண்பித்தார். கோடு கோடாக, அவ்வுடல் முழுக்க காயங்கள் பதிந்திருந்தன.

கிருஷ்ணமூர்த்திக்கு பெரும் கலக்கமாக இருந்தது. கூடவே, பூசாரியின் வருகையில், அந்த குரங்கின் பூர்வாங்க கதையும் பனந்தோப்புவாசிகளுக்கு தெரிவித்துவிட்டது. விளைவாக, பலகட்ட



மிரட்டல்களுக்குப் பிறகு, குரங்கை அவர்கள் கழியிலிருந்து விடுவித்தனர். ஆனால், எல்லோரும் அதிசயிக்கும் வகையில், குரங்கு அவ்விடத்திலிருந்து நகரவே இல்லை. குடிசையின் உள் உறைந்திருக்கும் இருளின் மீதே தனது கண்களைச் சுழற்றியபடி தன் நாக்கை உலாத்தியபடி நின்றிருந்தது. பூசாரி அதனைச் சமிக்ஞை ஒளி எழுப்பி, தன்னுடன் வரும்படி கூப்பிட்டார். குரங்கு அவரது பக்கமே தனது பார்வையைத் திருப்பவில்லை. கிருஷ்ணமூர்த்தி அழுகையே வந்துவிட்டது. தன் மீதிலான அதன் பாசமும் தனது இருப்பின் ஓர் அங்கமாக அது மாறியிருப்பதைக் கண்டு, ஊராரிடம் மன்றாடி வேண்டினார். தெய்வக் குத்தம் பொல்லாதது எனச் சொல்லி, கற்களை எடுத்து, குரங்கின் மீது படாதபடி சில சில அடிகளாக விரட்டி விரட்டியே அதனை பனந்தோப்பு பகுதிக்கு வெளியில் விரட்டிவிட்டார்கள்.

அன்றிலிருந்து சில காலம், கிருஷ்ணமூர்த்திக்கு வாழ்க்கையே ஓடவில்லை. அவர் பட்டும் படாதபடிக்கு தினசரிகளைக் கடத்திக் கொண்டிருந்தார். பலூன் தட்டியைச் சுற்றியும் இப்போது இளவட்டங்கள் சுற்றிவருவதும் குறைந்துபோயிருந்தது. இனி எக்காலத்திலும் அதிர்ஷ்டம் தனது கைக்கு அகப்படப்போவதில்லை என்று விதியை ஏற்றுக்கொண்டு, பொழுதும் இரவும் போக்கிக்கொண்டிருந்தார். குரங்கு கட்டப்பட்டிருந்த இடத்தில் நிலவும் வெறுமை அவரது கண்களில் உறைந்திருந்தது.

ஆனால், போன குரங்கு ஒரு மாய உருவம் எடுத்து, மீண்டும் பனந்தோப்புக்குள் நுழைந்துவிட்டது. ஒவ்வொரு நாளும் ஒரு புது கதையை அப்பகுதி மக்கள் கிளப்பிவிட்டார்கள். தொடக்கத்தில் ஊராரின் கண்களுக்கு மட்டுமே புலப்பட்ட அந்த குரங்கு, கிருஷ்ணமூர்த்தியின் கண்களில் அகப்படவில்லை. சம்பவங்களாகவே அந்த குரங்கின் உரு அவரது காதுகளில் விழுந்துகொண்டிருந்தது. கிருஷ்ணமூர்த்திக்கு ஒருபுறம் சந்தோஷம்தான் என்றாலும், மறுபுறம் தனது பார்வையில் பதிந்துவிடாமல் அரூபமாக வித்தையாடிக் கொண்டிருக்கும் அதனது உலாவுதல் மன வேதனையையும் கொடுக்கத்தான் செய்தது. போலவே, அது குறித்து அவரிடம் சொல்லப்படுகின்ற சம்பவங்களில் எல்லாம், யாரோ ஒருவர் பாதிப்புக்கும் இரத்த பிறாண்டலுக்கும் ஆளாகிறார்கள் என்பதும் அவரை பயமுறுத்தியது. முன்பு, ஊரார் கல் எறிந்து அதனை வெளியேற்றிய தருணத்தின் பழிவாங்கலாகவும், அந்த சமயத்தில் எதுவும் செய்யவியலாத கையறு நிலையில் தான் இருந்து அதன் வழி திரும்புதலைக் கண்ணீர் மல்கப் பார்த்துக்கொண்டு அதனை மீட்க வழியில்லாமல் நின்றதும், திரும்பி வந்த குரங்கு தனது கண்களில் படாமலிருக்கக் காரணங்கள் என்று கிருஷ்ணமூர்த்தி நினைத்துக்கொண்டார். எனினும், குரங்கின் சேஷ்டைகள் நின்றபாடில்லை. பெட்டிக்கடை பொடியன் பல மாதங்களுக்கு, குரங்கால் தன் கையில் இடப்பட்டிருந்த கோடுகளை கிருஷ்ணமூர்த்தியிடம் காட்டிக் காட்டி பொருமுவான். கல்லெறிந்த தினத்தில் முதல் வரிசையில் நின்றவன் அவன். தன் முன்னால் உருவமும் காட்டாமல், தன்னிலிருந்து முழுவதும் விலகியும் விடாமல், அவஸ்தைப்படுத்திக் கொண்டிருந்த குரங்கால் கிருஷ்ணமூர்த்தி ரொம்பவும் மனதொடிந்துப் போயிருந்தார்.

ஒரு நாள், வழக்கம்போல தனது பலூன் வியாபாரத்தை முடித்துக்கொண்டு வந்த இருள்பொழுதில், தன் குடிசையின் வாசல் திண்ணையில் உடல் சரித்துப் படுத்தபோதுதான், குடிசைக்குள் எதுவோ அசையும் அரவம் அவரது காதுகளில் துலக்கமாக விழுந்தது. படுத்த நிலையிலேயே வீட்டின் உட்புறம் தலை தூக்கிப் பார்த்தவர், குரங்கின் வால் மையத் தரையில் அசைவதைக் கண்டார். அவரது உடல் சிலிர்த்துக்கொண்டு எழுந்தது. மெல்ல, தரையிலிருந்து எழுந்து உள்நோக்கிச் செல்ல, அங்கு அந்தக் குரங்கு அவரைப் பார்த்தபடியே தனது கண்களை இடுக்கிக்கொண்டு அமர்ந்திருந்தது. கிருஷ்ணமூர்த்தி நிதானம் குலைந்து, தரையில் அப்படியே அதன் முன்னால் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். குரங்கின் கண்களிலும் நீர் பூத்திருந்தது. கிருஷ்ணமூர்த்தி வாஞ்சையுடன் அதனது தலையைத் தடவிக்கொடுத்தபடியே, உதடுகள் வெம்பத் துடித்தார். அவருக்கு அந்தக் குரங்கைத் திரும்பவும்

வீட்டில் வைத்துக்கொள்ளவே அச்சமாக இருந்தது. ஊர்க்காரர்கள் ஏறக்குறைய தெய்வ உருவாகக் காட்சியளிக்கும் அதனைக் கொன்றொழித்தாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை என்ற நினைப்பு அவரது மனதைக் குமைத்துக்கொண்டிருந்தது.

அப்போதுதான், தனது மகள் வீட்டின் ஞாபகம் அவருக்குள் எழுந்தது. இரவோடிரவாக, ஒரு துணியைக் குரங்கின் மீது போர்த்தியவர், சைக்கிளில் அமரச் செய்து, மகள் வீட்டை நோக்கிச் சென்றார். சிறிது காலத்திற்கு அந்த குரங்கு இங்கேயே இருக்கட்டும் என்று மகளிடம் மன்றாடி வேண்டிக்கொண்டார். அந்த தெருவில் ஆட்கள் அதிகமில்லை என்பதும் பனந்தோப்பு கிராமத்திலிருந்து கணிசமாகத் தொலைவில் அப்பகுதி இருப்பதாலும் குரங்கின் உயிருக்குப் பாதகமில்லை என்பது அவரது நினைப்பு.

வாசலில் நீண்டிருந்த புளியமரத்தினடியில் குரங்கு வந்து சேர்ந்தது இப்படியாகத்தான்.

**இனி எக்காலத்திலும் அதிர்ஷ்டம் தனது கைக்கு அகப்படப்போவதில்லை என்று விதியை ஏற்றுக்கொண்டு, பொழுதும் இரவும் போக்கிக்கொண்டிருந்தார். குரங்கு கட்டப்பட்டிருந்த இடத்தில் நிலவும் வெறுமை அவரது கண்களில் உறைந்திருந்தது.**

தனது குடியிருப்பு பகுதியிலிருந்து குரங்கின் கதைகளைத் தற்காலிகமாக நிறுத்திவிட்டார் என்றாலும் கிருஷ்ணமூர்த்திக்குக் குரங்கின் நினைப்பு அவ்வப்போது எழாமல் இருந்ததில்லை. சமயம் அமையும்போதெல்லாம் வந்து பார்த்துச் செல்வார்.

ஒருதீபாவளி சமயத்தில் குரங்கு தனது சங்கிலியை விடுவித்துக்கொண்டு என்றென்றைக்குமாக தொலைந்து போயிற்று. அனுமார் கோவிலுக்கே சென்று விசாரித்தும்கூட அந்த குரங்கினது நிலையை கிருஷ்ணமூர்த்தியால் தெரிந்துகொள்ள முடியவில்லை. போலவே, அந்த பூசாரியும் அனுமார் கோவிலை விட்டுவிட்டு வேறெங்கோ சென்றுவிட்டதாகவும் அவ்வூர் மக்கள் தெரிவித்தார்கள்.

கிருஷ்ணமூர்த்தி குறிப்பிட்ட நாட்களுக்கு ஒருமுறை குரங்கு திரும்ப வந்துவிடும் என்கிற நினைப்பில் மகள் வீட்டிற்கு வந்து வந்து போவார். அப்போதெல்லாம் குரங்கினது இடத்தில் அஞ்சலைக் கிழவிதான் தலை மயிரை அவிழ்த்துக்கொண்டு அமர்ந்திருப்பாள்.

கிருஷ்ணமூர்த்திக்கும் அஞ்சலை கிழவிக்கும் அவர்களது மகள் - மகன் திருமண சமயத்திலிருந்தே பேச்சு வார்த்தை இல்லை. வெவ்வேறு சாதியைச் சேர்ந்தவர்கள் என்பதும், தங்களது வாதங்களைப் புறந்தள்ளியவர்கள் என்பதும் அதற்கொரு காரணம். கிருஷ்ணமூர்த்தி எப்போதாவதுதான், இந்த குரங்கு சமாச்சாரத்தைப்போல வெகு அரிதாக மகள் வீட்டின் திசையில் வந்து செல்வார். அப்போதும், தரையில் உட்கார்ந்து ஒருவாய் தண்ணீர் குடிக்கும் வழக்கம் அவருக்கில்லை.

கிருஷ்ணமூர்த்தி, எஞ்சிய தன் வாழ்நாள் முழுக்கவே அந்த குரங்கைத் தேடித் திரிவது எனும் சபதத்துடன் அலைந்துகொண்டிருந்தார்.

அஞ்சலை கிழவிக்குத்தான் குரங்கு புளியமரத்தடியில் கட்டப்பட்டிருந்த காலத்தில் வெகு சிரமமாக இருந்தது. பரந்த அந்த வீட்டின் வாசலில் இருப்பதற்கு ஒரு பிடி நிலம் கிடைப்பதில் சிக்கலொன்றும் இல்லையென்றாலும் அந்த புளிய மரத்தின் மீது சாய்ந்து அமர்ந்திருப்பதும் அங்கிருந்தபடியே முழுத் தெருவின் விஸ்தாரத்தைப் பார்ப்பதும் இரவுப்பொழுதுகளில் அலாதி விருப்பம் அவளுக்கு. உண்மையில், அந்த சிறு நிலம் மட்டும்தான், தன் பிள்ளையின் வீட்டில் அவள் முழு உரிமையுடன் ஆக்கிரமிப்பு செய்துகொள்ளும் வெளியாக இருந்தது.

அதனால்தான், பிழைப்புக்குச் சென்றுவிட்டு ஒரு நாளிரவில் சாராயத்தை ஏற்றிக்கொண்டு தள்ளாடியபடியே வந்து புளியமரத்தினடியில் பார்த்தபோது அவளது இடத்தில் குரங்கு சங்கிலியால் பிணைக்கப்பட்டு உட்கார்ந்திருந்தது கண்டு, அஞ்சலையால் அதனை முழுயுரியாக கருத முடியவில்லை. ஏதோ, சிறு பிண்டம் தன்னைப் பார்த்து அசைகிறது என்கிற நினைப்பே அவளுக்கு எழுந்தது. அங்குமிங்குமென மரத்தின் அடியில் சங்கிலியை இழுத்துக்கொண்டு, அது சுற்றிச் சுற்றி வருவது அவளது பார்வைக்கு மர இலைகளில் நிழல் அசைவு போன்றே தோற்றமளித்தது. மதுவேறிய அவளது உடலின் சுழல்போல, இரவு போர்த்திய மரத்தின் பிறழ்வு சித்திரம்போலவும் அவளுக்கு இருந்தது. சீலையை ஒரு கையால் பிடித்து இழுத்துக்கொண்டு தரையில் புளியமரத்தினடியில் குரங்கின் அருகிலேயே அமர்ந்தாள்.

குரங்கு அவளைப் பார்த்து இப்படியும் அப்படியுமாக அசைந்தபடியே பழிப்புக் காட்டியது. அஞ்சலை அதனை உதாசீனம் செய்வதைப்போல கையால், அதன் திசையில் ஓட்டினாள். குரங்குக்குக் கோபம் வந்துவிட்டது. நெருங்கி வந்து அவளைக் கீறிவிட்டது. அஞ்சலைத் திரும்பவும் அதனை விரட்டிவிட்டவள் தன் இருப்பு நிலத்தை விட்டுக்கொடுக்கும் மனதில்லாதவளாக அங்கேயே அமர்ந்து மருமகளின் பேச்சையும் கேட்காமல் பேரப்பிள்ளைகளின் அதட்டலுக்கும் செவியுறாமல் அங்கே உண்டு உறக்கத்திலும் ஆழ்ந்தாள்.

தினமும் அந்த குரங்கின் சேஷ்டைகள் இருந்தன. அந்த பிடி நிலத்துக்கு இருவருமாக பங்குபோட்டு

உரிமைக் கொண்டாடினார்கள். கிழவி எப்போதுமே இரவில் போதையுடன்தான் வருவாள் என்பதால், குரங்கு முதல் நாளைப்போல, அதன்பிறகு அவளை ஒருபோதும் அச்சுறுத்தியதில்லை.

கிழவி இருட்டுக்குள் புகுந்து வீட்டை நெருங்கிக்கொண்டிருந்தாள். இன்றும் ஒரு மானுட குரங்கை அவள் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. பலமான அடி உதைகளும் மதியத்தில் இருந்து மாலை வரையில் கிடைத்திருந்தது. அதன்பிறகு, அவனுக்கு வேறு இடத்துக்குச் செல்ல வேண்டிய வேலை இருந்ததாலும் கிழவியின் வயதின் நிமித்தத்தாலும் விரட்டி அடித்துவிட்டான். வயது குமரிகள் அவனிடம் சிக்கியிருந்தால், இன்றைக்கு அதோ கதிதான். பலமுறை கிழவியுடன் பிழைப்புக்கு வருகின்ற மத்திய வயதுடைய பெண் பிள்ளைகளை பிடித்து வைத்துக்கொண்டு பலவித காமாந்திர சேஷ்டைகளை அவர்கள் செய்வார்கள். மனதும் இல்லாமல், வேறு கதியும் இல்லாமல் அதனையெல்லாம் அருவருப்புடனேயே ஏற்றுக்கொள்ளும் பெண்கள் வீடைந்ததும் அதனையெல்லாம் ஒரு கெடும் கனவைப்போல மறந்துவிட்டு, குடும்பத்தில் ஐக்கமாகிவிடுவார்கள். பின் எப்படித்தான் இந்த காலத்தில் வாழ்க்கையை நடத்துவது.

நிர்வாகத்தின் கட்டுப்பாட்டில் இருக்கின்ற மண் மேடுகளில் சிதறிக்கிடக்கும் இயந்திரங்களின் உதிரி பாகங்களைக் களவாடுவது என்பது பனந்தோப்பு கிராமம் உருவாகிய காலந்தொட்டு நடந்து வரும் செயல்முறைதான். அதனை அவர்கள் ‘பிழைப்புக்குச் செல்வது’ என்றே சொல்வார்கள். முன்பெல்லாம் ஆண்கள்தான் இந்த பிழைப்புக்குச் சென்றுவந்தார்கள். ஆனால், ஒரு சமயத்தில் இப்படி இரும்பு களவாடச் சென்ற ராஜு என்பவனைப் பாதுகாப்புப் படையின் ஆட்கள் பிடித்துக் கட்டிப்போட்டு ரீப்பர் பலகையால் விளாசி எடுத்துவிட்டார்கள். முதுகு தோள் உரிந்து செவந்து இரத்த படுகையாகிவிட்டது. அதன்பிறகு சில காலத்திற்கு மண்மேட்டிற்குள் ஆட்கள் செல்லாமல் இருந்தார்கள். ஆண்கள், அவர்கள் கையில் அகப்பட்டால் கொலை செய்துவிட்டாலும்கூட கேட்க முடியாத சூழல் நிலவியதால், ஊர் ஆண்கள் வெவ்வேறு தொழில்களில் ஈடுபடலாயினர். இப்படி உதிரியாகக் கிடைக்கின்ற இரும்பு துண்டுகளால் அதிகம் லாபம் பார்த்தவர்கள் இரும்பு கடை வியாபாரிகள்தான். பனந்தோப்பு கிராம வாசிகளில் எவரும் பெரிதாகப் படிப்பறிவு இல்லாதவர்கள் என்பதால், ஏதோ ஒரு கணக்கைக் காண்பித்து சொற்ப தொகையையே கையில் சேர்ப்பார்கள். களவு செய்து கொண்டு வரும் இரும்பு துண்டு என்பதால் அவர்களால் இரும்பு கடைக்காரர்களை எதிர்த்து கலகம் செய்யவும் முடியாமலிருந்தது.

பின்னர் சில காலம் கழித்து, வயதான கிழவிமார்கள்தான் இந்த பிழைப்புக்குச் செல்லும் வேலையில் இறங்கினார்கள். தொழில் வெற்றிகரமாகவே நடந்துகொண்டிருந்தது. அஞ்சலை அப்போதெல்லாம், இந்த தொழில் குறித்து கேள்விப்பட்டதுகூட இல்லை. பிழைப்புக்குப் போகிறவர்கள் ஏதோ ஒரு கூட்டுத் தொழிலில் இறங்கி வேலை செய்கிறார்கள் என்றே கருதினாள். அல்லது லாரியில் இருந்து சிந்தப்படும் நிலக்கரி உருண்டைகளைச் சேகரித்து விற்கும் வேலைகளில் ஈடுபடுகிறார்கள் என்றே நினைத்துக்கொண்டாள். கணவன் நோவு கண்டு இறந்ததற்கு பிறகுதான், பிழைப்புக்குச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் அவளுக்கு ஏற்பட்டது. கணவன் இருக்கும் காலத்திலேயே அவருடன் சேர்ந்து கொஞ்சமாக மது அருந்தும் பழக்கம் அவளுக்கு இருந்தது. அவரது இழப்பிற்குப் பிறகு, மதுவின் மீதிலான போதையும் அதிகரித்திருந்தது. பிள்ளை உணவு போடுவார்; ஆனால், மதுவுக்கு அவள் எங்கு கை நீட்டுவது? அப்போதுதான் பிழைப்பு செல்லும் பெண்களுடன் அவளுடன் சேர்ந்துகொண்டாள்.

என்.எல்.சி. பேருந்தில் ஏறி, முதல் அனல் மின் நிலையத்தின் அருகில் இறங்கி, அங்கு வலப்புறத்தில் சாலையோரத்தில் பெரு மலைகளைப்போலத் திரண்டு நீண்ட தைல மரங்களால் சூழப்பட்டு நிற்கும் மண்மேடுகளின் மீது ஏறி, அங்குமிங்கும் இருக்கும் பிளவுகளில் துழாவி மர இடுக்குகளில், செடி மறைவில், மண்ணால் மூடப்பட்டுக் கிடக்கும் இரும்பு துண்டுகளைத் துணியில் கட்டுக்கொண்டு மீண்டும் அதே வழியில் இறங்கி பேருந்து நடத்துநருக்கும் ஓட்டுநருக்கும் கொஞ்சம் பணம் கொடுத்துச் சரிக்கட்டிவிட்டு, ஊர் அடைந்து இரும்பு கடையில் போட்டுவிட்டு, பணம் பெறுதல் எனும் பிழைப்பு செயலாக்கத்தில் அஞ்சலையும் சுயமாக இணைந்துகொண்டாள். அவ்வப்போது ரோந்து வருகின்ற தமிழ் தெரியாத வடநாட்டுக் காவலர்களிடம் மட்டும் சிக்கிக்கொண்டுவிடக்கூடாது. அவர்கள் பொதுவாக அந்த மண்மேட்டின் மீது அமைக்கப்பட்டிருக்கும் சாலைகளில் ஜீப்பில்தான் வருவது வழக்கம். அதனால், பிழைப்புக்கு போகிற பெண்களில் ஒரிருவர் காவலுக்கு நின்றிருக்க, பிறர் இறங்கி இரும்பு துண்டுகளைத் தேடும் வேலைகளில் மும்முரமாக ஈடுபடுவார்கள். எங்கேனும் புழுதிக் கிளம்பிப் பறந்தாலோ, அல்லது ஜீப்பின் ஒலி சன்னமாகக் கேட்டாளோ செடிகொடிகளின் இடுக்களில் மறைவாய் பதுங்கிக்கொள்வார்கள்.

அஞ்சலை அந்த பிழைப்பை வெகு சீக்கிரத்திலேயே கைக்கொண்டுவிட்டாள். சிறிது நேர உழைப்புதான் என்றாலும், அதன் மீதிருந்த சாகச கிளர்ச்சி அவளைப் பெரிதும் கவர்ந்துவிட்டிருந்தது. கூடவே, அவளுக்குப் பகல் பொழுதுகளில் ஒரு வேலையும் இல்லாமல் இருப்பது சங்கடமாகவும் இருந்தது. வீட்டிலிருந்து மருமகளின் ஏரளனப் பார்வையில் சிக்க வேண்டியிருக்கும். அவ்வுணர்வு கொடுக்கும் தொந்தரவுகளில் இருந்து தப்பிப்பதற்காகவும்

மாலையில் மதுவருந்த கைப்பணமும் கிடைக்கிறது என்கிற உறுதியாலும் அவளும் ஏறத்தாழ ஆறு வருடங்களாகப் பிழைப்புக்கு சென்றுகொண்டுதான் இருக்கிறாள். வடநாட்டுக் காவலர்களிடம் இதுவரையில் மூன்று முறை சிக்கியிருக்கிறாள். முதல் முறை வயதின் காரணமாக அப்போதிருந்த காவலாளி இரும்பை மட்டும் திரும்பப் பெற்றுக்கொண்டு அதட்டி அனுப்பிவிட்டான். ஆனால், இரண்டாம் முறை பிடிபட்டபோது அவளது வலதுகையின் சுண்டுவிரலை இரும்பை போட்டு வெட்டிவிட்டார்கள். வலியில் அலறிய அவளது அழுகை அந்த மண்மேட்டின் மீது படிந்திருக்கிறது.

வெகு சொற்ப தினங்களில் மீண்டும் அவளது கால்கள் மண்மேட்டின் மீதேறிவிட்டன. சுண்டு விரல் இல்லாமலும் அவளால் வலுவுடன் இரும்பு களவாட முடிந்தது. இன்று அகப்பட்டபோதுகூட அவளுக்குப் பெரிதாகப் பயம் உண்டாகவில்லை. தலை மயிரில் ஒரு கொத்தோ, விரல்களில் ஒன்றோ, ஒரு கண்ணையோ அவள் இழக்கவும் தயாராகவே இருந்தாள். இரும்பை தூக்குவதற்கு உதவும் இரு கைகளையும் நடைக்குத் துணைபுரியும் கால்களையும் தவிர அவள் தனது உடலில் எதனையும் இழக்கத் தயாராகவே இருந்தாள். எனினும் தண்டனை அவ்வளவு ரணமேற்படுத்துவதாக இல்லை. சவுக்கால் விலாசினார்கள். பூட்ஸ் காலால் உட்கார வைத்து முகத்தில் எட்டி உதைத்தார்கள். கன்னத்தில் வெறுங்கையால் பளாரென்று இருமுறை அடித்தார்கள். வாயில் இரத்தம் வந்தது. உடல் சிறிது நேரம் பிண்டத்தைப்போல உணர்வற்றுப் போயிருந்தது. இருந்தபோதிலும் மாலையில் அவளை விரட்டிவிட்டார்கள்.

அன்று, அஞ்சலைக் கிழவி தன் முந்தானையில் முடிந்து வைத்திருந்த சில சில்லறைகளை மட்டும் சாராயக் கடையில் கொடுத்துவிட்டு, மீதித் தொகையை நாளைக்குப் பிழைப்புக்குச் சென்று திரும்பிய பின் தருவதாக சொல்லிவிட்டு, இருளில் தண்டவாளத்தின் அருகில் அமர்ந்து ஒரு குவட்டரை வாய்க்குள் கவிழ்த்தினாள். அவளோடு சென்ற மற்ற பெண்கள் இந்த நேரத்திற்கு வீடு திரும்பியிருப்பார்கள். தான் மட்டும் அனாதை உயிராக, கருங்கற்களின் மீது அமர்ந்து மதுவருந்துவது கொஞ்சம் நெருடலாகவே இருந்தது. பாதி பாட்டிலை காலி செய்தவள், அவ்வழியே வந்த ஒரு கால் ஊனம் கொண்ட கதிரேசனிடம் மீதி பாட்டிலைக் கொடுத்துவிட்டு, இருளில் இறங்கி நடக்கத் துவங்கினாள். அவளது பாதங்கள் இப்படித்தான் தனது வழக்கமான பாதையில் நடைபோடத் தொடங்கின.

வாசலை அடைந்ததும் பேரன் வந்து சுற்றிக்கொண்டான். "ஆயா.. எனக்கு என்ன வாங்கிட்டு வந்திருக்க.. பூந்தியா.. ஆட்டுக்காலா.." என்றான்.

அஞ்சலைக் கிழவிக்கு இந்த கேள்வி பெருத்த சங்கடத்தைக் கொடுத்தது. எதிரில் நின்றிருக்கும் பேரனின் விரிந்த விழிகளைப் பார்த்தவாறே, "ஆயா.. நாளைக்கு வாங்கிட்டு வரன் சாமி.. இன்னைக்கு ஒன்னும் கைக்கு அகப்படல.." என்று சொன்னாள். பேரனுக்கு முகத்தில் ஒரு சுணக்கம். தலையைக் கவிழ்த்துக்கொண்டு இரு நொடிகள் நின்றவன், "ம்ம். சரி ஓகே.. ஆனா நாளைக்கு கண்டிப்பா வாங்கியாறனும்.." என்று சொல்லிவிட்டு, வீட்டினுள் ஓடினான்.

புளியமரத்தினடியில் சாய்ந்து உட்கார்ந்த அஞ்சலை, ஒருமுறை தலை உயர்த்தி அந்த மரத்தின் கிளைகளைப் பார்த்தாள். எத்தனை எத்தனை கிளைகளைப் பிடிகளாக பற்றிக்கொண்டு, இந்த மரம் நீண்டு செல்கிறது. எத்தனை பின்னல்கள், எத்தனை பொடி இலைகள், எத்தனை பழங்கள். தன் வாழ்க்கையின் பல நிலைகளை அந்த மரத்தின் கிளைகள் பார்த்திருக்கிறது. சீக்கிரத்தில் அதன் உச்சிக்குச் சென்றுவிட வேண்டுமென்கிற ஆசை அவளது மனதுக்குள் எழுந்தது. அங்குதான் பெரும் சமயங்களில் அந்த தெய்வ குரங்கும் ஏறி அமர்ந்திருக்கும். பிடிகளை தாண்டி, இலைகளைத் தாண்டி பழங்களைத் தாண்டி வெகு உச்சிக்குச் சென்றுவிட வேண்டும். எவருக்கும் கைகொட்டாத உயரத்தில் ஏறி அமர்ந்துகொள்ள வேண்டும் என்று கருதியவள், மெல்லத் தனது உடலை மரத்தின் மீது சாய்ந்து அமர்ந்தாள். வாயில் எச்சில் திரண்டு ஒழுகியது. உடலில் இப்போது வலியை அவளால் உணர முடியவில்லை. கால்களை நீட்டி அமர்ந்து, பார்வையை வீட்டின் வாசலின் மீது பதித்தாள். உள்ளிருந்து இன்னும் சில நிமிடங்களில் தனக்கான இரவு உணவு வரும் என்கிற நம்பிக்கை அவளுக்கு இருந்தது.

அதற்குள் பேரப்பிள்ளைகள் இருவரும் கிழிந்து தொங்கிக் கொண்டிருந்த பாயைத் தூக்கிக்கொண்டு வந்து அவளுக்கு அருகில் உட்கார்ந்தார்கள். காயங்களால் ரணமேறியிருந்த தன் உடலை மதுவைக் கொண்டு சூடேற்றி இருந்த அஞ்சலை, தன் பேரப்பிள்ளைகள் தன் முன்னால் அமர்ந்து கண்களை இடுக்கிக்கொண்டு அமர்ந்திருப்பதைப் பார்த்து திருப்தியுற்றாள். வழக்கம்போல, இரவு நேரங்களில் கதைகளுக்காக, சுற்றி அவர்கள் வட்டமிட்டு அமருவது இயல்புதான் என்பதால், "இன்னைக்கு உங்களுக்கு ஒரு கதை சொல்லப் போறேன்" என்று தொடங்கினாள். உள்ளே அவளுக்கு சாப்பாடு போடு சத்தம் அவளது காதுகளில் விழாமல் இல்லை.

அண்ணனும் தங்கையுமாக தன்னெதிரில் அமர்ந்திருந்த பிள்ளைகளைப் பார்த்து, "ஒரு ஊருல நல்லத் தம்பின்னு ஒருத்தனும் நல்லத் தங்காள்னு ஒருத்தியும் வாழ்ந்து வந்தாங்க.." என்று ஆரம்பித்தாள். அவளது உடலிலிருந்து வியர்வை குமைந்து எழுந்தது. முந்தானையை எடுத்து, புழுக்கத்தை ஓட்டியபடியே

கதையை விவரிப்புச் செய்துக்கொண்டிருந்தாள். அந்தப் புழுக்கம் குமையும் இராப் பொழுதில், நட்சத்திரமிட்ட வானத்தின் வெளிச்சப் புள்ளிகளுக்கு மத்தியில், நாள்பொழுதில் உடலில் வாங்கிய காயங்களுடன் கதை விவரிப்புச் செய்த அஞ்சலையின் எதிரில் அமர்ந்திருந்தது, அவளது பேரப் பிள்ளைகள் மட்டுமே அல்ல. எங்கோ ஒரு நிலவெளியில் கண்டெடுத்து, தனது இருப்பின் பாதியாக அதனை வரித்துக்கொண்டு, அதனது உயிரைக் காக்கும் பொருட்டே புளியமரத்தினடியில் கொண்டு வந்து கட்டிப்போட்டு, பின்பு அங்கிருந்து தொலைந்து விட்டிருக்கிறது என்று தனது காலம் முழுக்க தேடும் சபதம் ஏற்றிருக்கும் கிருஷ்ணமூர்த்தியின் பார்வை புலத்தில் இருந்து என்றென்றைக்குமாக மறைந்துபோயிருந்த அந்த மாயக் குரங்கும்தான்.

ஏழு குரங்குயிர்களுடன் தானும் மரித்திருக்க வேண்டிய நிலையிலிருந்து மீண்ட, அந்த மாயக் குரங்கு, அதே புளிய மரத்தினடியில் தனது காலத்தைக் கடத்திக் கொண்டிருக்கும் அஞ்சலையில் கண்களுக்கு மட்டும் புலனாகும் விதத்தில் அசைவுக் கொண்டிருந்தது. பேரப்பிள்ளைகளுடன் சேர்ந்து, கதையை அவள் அந்தக் குரங்குக்கும்தான் சொல்லிக் கொண்டிருந்தாள். ●

ராம் முரளி <raammurali@gmail.com>

# நாகரிகம்



வைலார் கூஃப்தான்



தமிழில்: மாதங்கி
ஓவியம்: Robin Florie

உங்கள் தெரிவுகள் உங்களை எங்கே வழிநடத்திச் சென்றிருக்கின்றன என்பதை அறிந்து ஏமாற்றம் அடைந்துவிட்டீர்களா? மீண்டும் ஆரம்பநிலைக்கே வந்துவிட்டதை உணர்கிறீர்களா? வந்துவிட்டீர்கள். இது ஒரு வட்டம். ஆனால், மாற்றத்திற்கான நம்பிக்கை எப்போதுமே இருக்கிறது.

**1. ஆரம்பம்**

*உங்களுக்கு ஒரு நாகரிகம் இருக்கிறது! அது எது என்பது பொருட்டன்று; அது நவீன மேற்கத்திய நாகரிகம் என்று வைத்துக் கொள்வோம். உங்களுக்கு உண்மையிலேயே தேவையான விரைவுணவு, விளையாட்டு நிகழ்வுகள் எல்லாம் அதில் இருக்கும். மேற்கத்தியத் தொழில்நுட்பம் உங்களுக்கு அதிக இராணுவ ஆற்றலைக் கொடுக்கும். உங்களைப் பாதுகாப்பாக வைத்துக்கொள்ள, நிறுத்தமுடியாத அற்புத இராணுவ தாங்கிகள், வெப்பம் நோக்கிய ஏவுகணைகள் ஆகியவை உங்களிடம் இருக்கின்றன. தொடங்குவதற்கு இது நல்ல இடம்.*

*நீங்கள் மத்திய ஆஸ்திரேலியாவில் அத்துவானத்தில் இருக்கும் பழங்குடி மக்கள் குழுவைக்கூடத் தேர்ந்தெடுத்திருக்கலாம்; கொட்டைகள், கனிகள், ஈட்டிகள், கயிறுகள் சகிதம் இருக்கும் ஒரு குழுவை. அல்லது நீங்கள் கம்யூனிஸ்ட் நாடான சீனாவையோ, அண்ட்டார்ட்டிகாவில் வசிக்கும் விஞ்ஞானிகள் குழுமத்தையோ தேர்ந்தெடுத்திருக்கலாம். ஆனால், நாம் நவீன மேற் கத்திய நாகரிகத்தையே கெட்டியாகப் பற்றிக்கொள்வோம். உங்களுக்கு மனிதர்களையும் அளித்துவிடுவோம். அவர்களை ஜான், ஜேன் என்று அழைப்போம். நாகரிகம் என்று ஒன்று உங்களிடம் இருந்தால் அதில் குறைந்தபட்சம் இரு மனிதர்களாவது இருக்க வேண்டும்.*

*இப்போது உங்கள் நாகரிகத்துடன் ஓர் அரசியல் கட்டமைப்பு வருகிறது. உங்கள் கட்டமைப்பு ஒரு ஜனநாயகமாகவும் அதிலுள்ள ஒவ்வொருவருக்கும் ஓட்டுரிமை (குழந்தை பாலியல் வன்முறையாளர்கள், கொடிய குற்றவாளிகள் ஆகியோர் தவிர்த்து) இருக்கும். உங்கள் கட்டமைப்பு குடியரசாக இருக்கலாம், துண்டு அறிக்கைகளில் பார்க்க நன்றாக இருக்கும் என்பதால் அதை நீங்கள் ஜனநாயகம் என்று பறைசாற்றிக் கொள்ளலாம். உங்கள் கட்டமைப்பு சர்வாதிபத்யமாக இருந்து நீங்கள் அந்தக் குழப்பமான சொல்லின் ஒலியைக் கேட்டு மகிழ அனைவரையும் கட்டாயப் படுத்தலாம். சர்வாதிபத்யம்!*

*ஆனால், ஒரு பெரிய வாய்ப்பு உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் பாரம்பரியத்தைப் போற்றுபவரா - கடந்த காலத்தால் கட்டுண்டு, பழைய கால முறைகள்தாம் சிறந்தவை ஏனெனில், அப்படித்தான் காலங்காலமாகச் செய்து வருகிறோம் என்று உறுதியாக எண்ணுபவரா? அல்லது நீங்கள் அதீதமாக, வருங்காலத்தால் ஈர்க்கப்பட்டு, இதுவரை இப்படி செய்துபார்த்ததே இல்லை என்பதால் புதிய வழிமுறைகளே பழையனவற்றை விட மேலானவை என்ற நம்பிக்கையுடன் இருப்பவரா? எச்சரிக்கை, உங்கள் நாகரிகத்தின் வருங்காலம் உங்கள் தேர்வைப் பொறுத்தே அமையும். ஜான், ஜேன் ஆகியோரின் வாழ்க்கை இப்போது பணயமாக்கப்படும்.*

*நீங்கள் பாரம்பரியத்தைத் தெரிவு செய்தால் பகுதி 2க்குச் செல்லவும்.*



நீங்கள் அதீதவாதத்தைத் தெரிவு செய்தால் பகுதி 5க்குச் செல்லவும்.

**2. பாரம்பரியம்**

நீங்கள் ஒரு பாரம்பரியவாதி. அல்லது கண்மூடித்தனமான பின்பற்றாளர் அல்லது ஆரம்பத்திலிருந்து இறுதிவரை எல்லாவற்றையும் வரிசைக்கிரமமாக வாசித்து வரும் எவரோ ஒருவர்; எதுவுமே ஒரு பொருட்டன்று. எப்படியிருந்தாலும் நீங்கள் கடைசியில் ஒரே இடத்துக்குத்தான் வந்து சேர்வீர்கள்.

சரி, இப்போது உங்களுக்கென்று ஒரு நாகரிகம் இருக்கிறது. தொலைக்காட்சி முன் பலத்த இரவுணவுகளும் விலைமதிப்புள்ள வாகனங்களும் உங்களிடம் இருக்கின்றன. நீங்கள் தேர்தல்கள் நடத்துகிறீர்கள். இப்படித்தான் காலங்காலமாக எல்லாம் நடந்து வருகிறது; இப்படித்தான் இது இருக்கவும் வேண்டும். காலனித்துவ சக்திகளை எதிர்த்துப் போராடிய சேற்றில் முளைத்த செந்தாமரைகளைச் சட்டை செய்ய வேண்டாம். அவர்கள் சுதந்திரம், விடுதலை போன்ற விளம்பரத்திற்கேற்ற இன்னும் பல சொற்களுக்காக வக்காலத்து வாங்கிக் கொண்டிருந்தார்கள். நிறுவனங்கள் மக்களிடமிருந்து விலகி இருந்தன; மக்கள் நிறுவனங்கள் மீது நம்பிக்கை வைத்திருந்தார்கள். ஜான், ஜேன் இருவரும் தங்களைச் சுற்றி இருப்பவை நூற்றாண்டுகளாக இப்படியேதான் இயங்கிக்கொண்டு இருந்திருக்கின்றன என்பதை அறிந்தே ஆசுவாசப்படுத்திக் கொள்கிறார்கள்.

எல்லாமே நிலுவையில் இருக்கின்றன. நீங்கள் நிறையத் தேர்தல்களை நடத்துகிறீர்கள் அல்லது நடத்துவதுபோல் பாவனை புரிகிறீர்கள். அதிகாரத்தில் இருப்பவர்கள் எப்போதுமே அதிகாரத்தில் இருக்கிறார்கள். உலகம் எப்போதும் இருப்பது போலவே இருக்கிறது. காவலர்கள் காலங்காலமாகத் தெருவில் இருப்பவர்களையே கைதுசெய்துள்ளார்கள். பாதுகாப்பு என்ற பெயரில் பேசுவதற்கான சுதந்திரம் எப்போதுமே கட்டுப்படுத்தப்பட்டு இருக்கிறது. நிறுவனங்கள் மக்களை அழித்தொழிப்பதும் எப்போதுமே நடந்துகொண்டே இருப்பதுதான் என்றபட்சத்தில் குடிமகனே(ளே) நீ ஏன் அதைக் கேள்வி கேட்க வேண்டும்?

வாழ்த்துகள்! கொடுந்தேசியவாதம் உங்களுக்குக் கிடைத்துவிட்டது!

பகுதி 3க்குச் செல்லவும்

**3. கொடுந்தேசியவாதம்**

உங்களுக்கு எவ்வளவு நல்லதாயிற்று, ஆடு சதை மூடுமளவு எழும்பியிருக்கும் மூடிய காலணிகளிலும் சீருடையிலும் நீங்கள் எவ்வளவு அருமையான காணப்படுகிறீர்கள். உங்கள் ரகசிய காவல்படையினர் மிகவும் ஆபத்தானவர்கள்; ஏனெனில், அவர்கள் மிகவும் கவர்ச்சியானவர்கள். அவர்கள், உதை நடனத்திற்குப் பேர் போன ராக்கட்ஸ் நடனக் குழுவினர் கால்விரல்களில் இரும்புக் கவச காலணிகளால் உதைத்தாடினால் எப்படி இருக்கும், அப்படி தெருக்களில் தேசத்துரோகிகளை உதைப்பார்கள். நீங்கள் கைத்துப்பாக்கியைத்

தலையணையடியிலும், தேசிய பாதுகாப்பு குறித்த புத்தகங்களை படுக்கையருகிலும் வைத்துக்கொண்டு உறங்குவீர்கள். அல்லது இரகசிய குழும அறைகளில் இரகசியக் கூட்டங்களை நடத்தி கமுக்கமான கைக்குலுக்கல்கள் மூலம் விதிகளை முத்திரையிட்டு அடைத்துத்தீர்மானிப்பீர்கள். கலைஞர்கள் பணிவதை முகாம்களில் நிரம்பியிருப்பர். அட, செலவில்லாமலே உழைப்பு கிட்டிவிடும்! அது நியாயமானதாகவும் சமநோக்குடனும் இல்லாவிட்டால்தான் என்ன? சமத்துவம் என்பது ஹிப்பிகளுக்குரியது. ஜான், ஜேன் இருவரும் எல்லா காலங்களிலும் தம்மைப் பாதுகாப்பாக வைத்துக்கொள்ள உங்களையே நம்புகிறார்கள்.

நீங்கள் கொடுந்தேசியவாதியாக இருக்கும் பட்சத்தில் நீங்கள் செய்வது சொல்வது எல்லாமே சரியானதுதான்; கடவுளோ சாத்தானோ, ஏன் உங்கள் இடது காலின் காலணியோ உங்களை என்ன செய்யவேண்டும் என்று சொல்லியிருப்பதால்தான் தெய்வீக ஆற்றல் உங்களிடம் உள்ளது! அதன் பொருள் நீங்கள் எப்போதுமே சரியானவர்தான்; அதையும் மற்ற அனைவரும்கூடத் தெரிந்துகொள்ளும் வண்ணம் செய்துவிடுங்கள். இனி போருக்குச் செல்வோம்!

பகுதி 7க்குச் செல்லவும்.

**4. மனநிறைவுறுதல்**

இப்போது நீங்கள் அதிகாரத்தில் பொறுத்துக் கொள்ளமுடியாத கால அளவிற்கு இருந்தாகிவிட்டது. இனியும் எதற்கு கவனம் செலுத்தவேண்டும்? தொலைக்காட்சியில் எத்தனையோ நல்ல நிகழ்ச்சிகள் இருக்கவே இருக்கின்றன (அல்லது மாட்டுச்சண்டை வளாகத்தில், அல்லது மைதானத்தில் அல்லது என்ன உங்களுக்கு இருக்கிறதோ அது). நீங்கள் தொலைக்காட்சியில் காட்டப்படும் அறிய பெரிய விளையாட்டு நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசுகிறீர்கள். வண்டியினுள் அமர்ந்தவாறே உண்ணக்கூடிய விரைவு உணவகத்திற்கு வருகிறீர்கள். ஒரு பற்பசை செய்யவேண்டிய அனைத்தையும் உங்கள் பற்பசை செய்கிறதா என்று கவலைப்படுகிறீர்கள். சிறிது காலம் கழித்து, எதையும் கவனிப்பதை நிறுத்திவிடுகிறீர்கள். ஜான், ஜேன் இருவரும் எதையோ செய்துகொண்டிருக்க, அது என்ன என்பது உங்களுக்கு உறுதியாகத் தெரியவில்லை. இதுதான் எப்பவுமே நடக்கிறது, இப்படித்தான் எப்பவுமே நடக்கவும் செய்யும். இதுதான் முன்னேற்றமா? உங்களுக்கு உறுதியாகத் தெரியவில்லை .

பகுதி 2க்குச் செல்லவும்

**5. அதீதவாதம்**

நீங்கள் பரிசோதனையில் இறங்க முடிவு செய்கிறீர்கள். கலைஞர்கள் உங்கள் சமூகத்தை விரும்புகிறார்கள். ஓவியர்கள் நெடிந்துயர்ந்த கட்டிடங்களுக்கு வண்ணம் பூசுகிறார்கள், சிற்பிகள் கழிவுகளிலிருந்து கலைப் படைப்பை உருவாக்குகிறார்கள். இயக்குநர்கள் கருத்த ஒளியில் திரைப்படங்களைப் படம்பிடித்து இருளோடிய திரையரங்குகளில் காண்பிக்கிறார்கள். இசைக் கலைஞர்கள் சென்ற நூற்றாண்டுகளின் படைப்புகளை சுக்குநூறாக்குகின்றனர். நிறுவனங்கள் தங்கள் சொந்த இலச்சினைகளை நையாண்டி செய்யவே திருவிழாக்களை நடத்துகிறார்கள். மக்களும் மாற்றங்களை ஏற்படுத்த வேண்டும் என்ற ஒன்றிற்காகவே ஏற்கனவே இருந்து கொண்டிருந்தவற்றை மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். உடைந்த அறைகலன்களே அன்றைய தேதியின் புதிய பாணிப் பொருள்களாகின்றன. எல்லோருமே ஆறு மாமன்மார்கள், ஒரு மாமி சகிதம் வாழ்கிறார்கள்.

ஜான், ஜேன் இருவரும் தத்தம் பெயர்களை இஸ்தமஸ், க்வாக்மீர் என மாற்றிக்கொள்கிறார்கள். புதிய கருத்தாக்கம் எதுவாக இருந்தாலும் பரவா யில்லை, பழையதை விட அது சிறப்பானதாக இருக்கவேண்டும். சிறிது காலமாகவே அரசுகளை மாற்றவே இல்லை என்பது உங்கள் நினைவுக்கு வருகிறது. பழையதைத் தூக்கி எறி! புதியதைக் கொண்டு வா! ஒரு புரட்சிக்கான நேரம் கூடிவந்தாகிவிட்டது!

பகுதி 6க்குச் செல்லவும்

**6. புரட்சி**

நீங்கள் தெருவில் துண்டுப் பிரசுரங்களை விநியோகிக்கிறீர்கள். குடிமக்கள் எல்லாவற்றையும் எதிர்த்து பீடு நடை போடுகிறார்கள். இரத்தக்களரியற்றத் தாக்குதல் மூலம் மக்களின் நாயகர் பொறுப்பேற்கிறார். கழித்துயரத்துடன் முந்தைய அதிகாரங்கள் ஒரே நாளில் ஒரே சிறைச்சாலையில் உங்கள் கண்காணிப்புப் பார்வையின் கீழ் தற்கொலை செய்துகொள்கின்றன. எவ்வளவு சௌகரியம்! நீங்கள் முந்தைய சட்டதிட்டங்களையெல்லாம் குறித்துக்கொள்கிறீர்கள். ஏனெனில், எப்படி அவர்கள் செய்திருந்தார்களோ, நீங்கள் அதிலிருந்து மாறுபட்டுச் செய்யவேண்டும். நீங்கள் புதிய அரசியலமைப்புச் சாசனத்தைப் பழையதிலிருந்து முற்றிலும் வேறுபட்ட உருவளவில் (எழுத்துகளை) செய்கிறீர்கள். சபாஷ், இந்த அரசு முந்தியதைவிட எவ்வளவோ சிறந்தது.

எதிர்க்கும் புரட்சியாளர்களை நீங்கள் ஒடுக்குகிறீர்கள். அவர்கள் எல்லாவற்றையும் மாற்றத் துடிக்கிறார்கள். சமூகத்தில் எந்த ஒரு கருத்து வேறுபாடும் தணிக்கப்படவேண்டும். ஜான், ஜேன் இருவருக்கும் சுதந்திரம் வேண்டும். எல்லாம் புதிய அரசின் நன்மைக்கே!

பகுதி 4க்குச் செல்லுங்கள்

**7. போர்**

தம்பி! போர்தான்! உங்கள் படை அணிவகுப்பு, கடிகார பொம்மைகள் போல அணிவகுத்துச் செல்கிறது. பெரிய மீசையும் ஒரு கண்ணுக்கு

மட்டுமான கண்ணாடியுடன் கூடிய கர்னல் மஸ்டர்ட்தான் உங்கள் படைப் பெருந்தலைவர், ஒவ்வொரு படைவீரருக்கும் ஓர் இறகுடன் கூடிய உங்கள்தொப்பிகள் உயர்தரமானவை(அதிகாரிகளுக்கு இரண்டு!)தெருக்களில் உங்கள் மேதகு ஆதரவாளர்கள், அவர்களுக்குப் பிரியமானவர்கள் வீர நடை பயிலும்போது பெருமிதத்தால் விம்முகிறார்கள். மக்களும் அதற்கு ஆதரவளிக்கிறார்கள் (குடிமைப்போர் என்றால், இரு தரப்பிற்கும்). அப்படி அவர்கள் செய்யவில்லை என்றால் தேசத்தின் பாதுகாப்பிற்காக நீங்கள் அவர்களை மௌனிக்கச் செய்கிறீர்கள். ஜான் ஆயுதங்களைத் தோள்களில் சுமந்து முதன்மையானவனாகச் செல்கையில் ஜேன் அவனுக்கு ஒரு பறக்கும் முத்தம் அளிக்கிறாள். அவன் ஒரு வெற்றி வீரனாகத் திரும்பி வருவான்; பிறகு அவர்கள் மணமுடிப்பார்கள்.

உங்கள் வீரர்கள் துணிவுடன் போரிடுகிறார்கள். கொடுங்கோன்மையிலிருந்து ஒரு சிறு குழந்தையை ஒவ்வொரு முறையும் காப்பாற்றும்போது அவர்கள் புகைப்படங்களுக்குக் காட்சி தருகிறார்கள். இரத்த சேதம்எங்குமில்லை;குறைந்தபட்சம்புகைப்படங்களில் இல்லை. உண்மையும் நீதியும் இருக்கும் தரப்பே உங்களுடையது என்று நீங்கள் உறுதியாக நம்பிக் கொண்டிருக்கையில் எதிரியால் உங்களை எதிர்க்க முடியவில்லை-

வாழ்த்துகள்! நீங்கள் போரில் வெற்றிபெற்று விட்டீர்கள்!இப்போது அடுத்தபடியாக,எவ்வகையான சமூகத்தை நீங்கள் கட்டமைக்க வேண்டும்? உங்கள் வருங்காலம் நேர்த்தியான கற்பனை நல்லுலகா அல்லது இருண்ட தீய உலகா?

நேர்த்திமிகு கற்பனை உலகைக் கட்டமைக்கிறீர்கள் என்றால் பகுதி 8க்குச் செல்லவும்

இருண்ட தீய உலகைக் கட்டமைக்கிறீர்கள் என்றால் பகுதி 9க்குச் செல்லவும்.

**8. நேர்த்திமிகு கற்பனை உலகு**

மருத்துவம்: நோய் என்பதை நீக்கியாகிவிட்டது. மக்கள் முழுமையான உடல்நலத்துடன் 120 வயது வரை வாழ்கிறார்கள். இதன் விளைவாக உங்கள் மக்களுக்கு, சமூகத்திற்கு தங்கள் பங்கை ஆற்றவும் வாழ்வை அனுபவிக்கவும் அதிக நேரம் கிடைக்கிறது.

வேளாண்மை: முன்னேறிய தொழில்நுட்பத் திறன்கள் மூலம் உணவு பெருத்த அளவில் உற்பத்தி செய்யப்படுவதால் ஒவ்வொருவருக்கும் உணவு தாராளமாகக்கிடைக்கிறது. உணவில், சிறப்புச்சேர்ப்பி கள் சேர்க்கப்பட்டதால், ஒவ்வொரு குடிமகனு(ளு) க்கும் போஷாக்கு, உடல்நலம் ஆகிய இரண்டும் உணவின் மூலம் கிடைக்க உத்தரவாதம் இருக்கிறது.

வேலைவாய்ப்பு: ஒவ்வொருவருக்கும், வாழ்வதற்குத் தேவையான பணத்தை ஈட்டுவதற் குண்டான வேலை கிடைப்பதற்கு உத்தரவாதம் இருக்கிறபடியால், அனைத்து மக்களும் தங்களுக்குத் தாங்களே பக்கபலமாக இருக்கமுடிகிறது.

வீட்டுவசதி: வீடு இல்லாதவர் என்று எவரும் இல்லை. குடிமக்களுக்குப் பாதுகாப்பும், வாங்க இயலக்கூடிய அளவில் வீடு கிடைக்க உத்தரவாதம் உள்ளது.

கல்வி: குடிமக்கள், கிடைக்கக்கூடிய எந்த ஒரு தகவலையும் படிக்கலாம். அரசு, முழுமையான மனித வரலாறு, நடப்பு நிகழ்வுகள் அனைத்தையும் தருவித்து மக்களை வாசிக்க ஊக்குவிக்கிறது.

சட்டம்: அனைத்து வழக்குகளும் நியாயமான நீதிமன்றங்கள் மூலம் தீர்மானிக்கப்படுகின்றன. தவறுகள் செய்யப்படுவதே இல்லை..

அரசாங்கம்: குடிமக்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள் என்பதை அரசு உறுதிசெய்துகொள்ள நினைக்கிறது.

பலே: உங்களுக்கென்று என்ன ஓர் அற்புதமான உலகை நிர்மாணித்துவிட்டீர்கள். இப்போது செய்யவேண்டியதற்கு மீதம் உள்ளது என்னவென்றால், கற்பனை நல்லுலகை அனுபவிப்பதற்கு அனைவருக்கும் உதவி செய்வது மட்டுமே

பகுதி 10க்குச் செல்லவும்.

**9. தீய உலகு**

மருத்துவம்: நோய் என்பதை நீக்கியாகிவிட்டது, மக்கள் முழுமையான உடல்நலத்துடன் 120 வயது வரை வாழ்கிறார்கள். இதன் விளைவாக உங்கள் உலகின் மக்கள்தொகை மிகுதியாகி வளங்களுக்குப் பற்றாக்குறை வந்துவிடுகிறது.

வேளாண்மை: முன்னேறிய தொழில் நுட்பத்திறன்கள் மூலம் உணவு பெருத்த அளவில் உற்பத்திசெய்யப்படுவதால்ஒவ்வொருவருக்கும்உணவு தாராளமாகக் கிடைக்கிறது. சிறப்பான சேர்ப்பிகள் உணவில் சேர்க்கப்படுவதால் அரசாங்கத்திடம் கீழ்ப்படிவதற்கு உத்தரவாதம் இருக்கிறது.

வேலை வாய்ப்பு: வாழ்வுக்குத் தேவையான பொருளை ஈட்டும் வகையில் எல்லோரும் ஒரு வேலை கிடைப்பதற்கு உத்தரவாதம் உள்ளது. இதனால் ராஜினாமா செய்ய இயலாத வகையில் மக்கள் திகிலூட்டும் பணிகளில் சிக்கிவிடுகிறார்கள்.

வீட்டுவசதி: வீடற்றவர் என்று யாரும் கிடையாது. அப்படியும் வீடில்லாதவர்கள் காப்பகங்களில் வாழவைக்கப்பட்டுப் பக்குவப்படுதலுக்கும் சோதனைகளுக்கும் உட்படுத்தப்படுகிறார்கள்.

கல்வி: குடிமக்கள் கிடைக்கக்கூடிய எந்த ஒரு தகவலையும் படிக்கலாம். படிக்க அனுமதிக்கப்பட்டத் தகவலையே அரசு குடிமக்களுக்கு அளித்து வருகிறது, மேலும் யார் அதைப் படிக்கிறார்கள் என்பதையும் பதிவு செய்துகொள்கிறது.

சட்டம்: எல்லா வழக்குகளும் நியாயமான நீதிமன்றங்களில் தீர்மானிக்கப்படுகின்றன. பிழைகள் ஏற்படுவதேயில்லைதான், எப்படி ஏற்படும்?

அரசாங்கம்: குடிமக்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள் என்பதை அரசு உறுதிசெய்துகொள்ள நினைக்கிறது.

அடடா, என்ன ஒரு கோரமான உலகை உங்களுக்கு நீங்களே நிர்மாணித்துக் கொண்டுவிட்டீர்கள். அட, அடுத்த வீட்டில் இருக்கும் மக்களே, வேறு இடத்திலா? அவர்களுக்குக் கற்பனை நல்லுலகு இருக்கிறது, உங்களுக்குக் கிடையாது. துயரம், கூட்டத்தை விரும்பும். சிலவற்றை மாற்றவேண்டிய காலம் வந்தாயிற்று.

பகுதி 10க்குச் செல்லவும்

**10. உற்சாகம்**

ஒரே போன்ற தோற்றத்துடன் புன்னகைக்கும் மக்கள் வரிசைகளில் இருந்தவாறு, சீரான சுருதியில் நாட்டுப்பற்றுப் பாடல் ஒன்றைப் பாடுகிறார்கள். கற்பனை நல்லுலகு / தீய உலகு, இதில் நீங்கள் ஒருபோதும் தனியர் அல்லர்.

உங்கள் சமூகம் மகிழ்ச்சியுடன் அல்லது மகிழ்ச்சியின்றி இருக்கிறது. வேறொருவருக்கு அது இன்னும் சிறப்பாக அல்லது சிறப்பின்றி இருக்கிறது. ஆனால், ஒன்று மட்டும் உங்களுக்கு உறுதியாகத் தெரிகிறது. மற்றவர்கள் உங்களிடமிருந்து வேறுபடுகிறார்கள், அது ஆபத்தானது.

மற்ற ஒவ்வொருவரும் உங்களுடைய மகிழ்வையோ மகிழ்வற்ற நிலையையோ கட்டாயம் பகிரவேண்டும். மற்ற ஒவ்வொருவரும் உங்களைப் போலவே இருக்க வேண்டும்; ஜானைப் போல, ஜேனைப் போல.

அடேய் தம்பி! மீண்டும் போர்தான்!

பகுதி 11க்குச் செல்லவும்

**11. மீண்டும் போர்**

நீங்கள் வியப்படைய மாட்டீர்கள் என்று நம்புகிறேன். மீண்டும் போருக்கே வரவேண்டியுள்ளது. விவரங்கள் மாறினாலும் வடிவம் அப்படியே இருக்கிறது.

சென்ற முறை நடந்த போர் வேடிக்கைக்காக நடத்தப்பட்டது. ஆனால், இந்தப் போர் தீவிரமானது. நீங்கள் 10,000 ஆண்டுகள் பழைமை வாய்ந்த மடாலயங்களையும் கைக்குழந்தைகளின் இடக்கைகளையும் வெடி வைத்துத் தகர்க்கிறீர்கள். மரணகாயங்கள் உள்ள போர் வீரரை உயிருடன் வைத்திருக்கக்கூடிய நுட்பத்திறன் உங்களுக்குப் பரிபூரணமாக இருக்கிறது; தற்கொலை இயக்கங்களைச் சேர்ந்த ஒற்றர்களுக்கு இந்த நுட்பத்திறன் உதவிக்கரமாக இருக்கிறது. உங்கள் போர்வீரர்கள் களத்தில் இறைவனிடம் பிரார்த்திக்கிறார்கள். ஆனால், உங்களுக்குத்தான் பதிலளிக்க நேரம் இல்லை. நீங்கள் இராணுவ முடிவுகள் எடுப்பதில் மும்முரமாக உள்ளீர்கள். இந்தப் போர் கடினமானதுதான், கடினமான தெரிவுகள் செய்யப்படவேண்டும். ஜான் வீர நடை பயின்றவாறு செல்கிறான்; பின்னொரு நாளில் ஜேனிடம் திரும்பி வருவான். அல்லது வராமல்கூட இருப்பான். அதுதான் போர்.

நீங்கள் வென்றீர்களா? இதுதான் கேள்வி. உங்களைப் போல இல்லாத மக்கள் மீது ஆதிக்கம் செலுத்தி இரும்புக் கரங்களால் ஆட்சி புரிவீர்களா? அல்லது தோற்றுவிட்டு இப்போது உங்கள் சமூகம் அழிவதைக் காணவேண்டியுள்ளதா?

வெற்றியடைந்திருந்தால் பகுதி 12க்குச் செல்லவும்.

தோல்வியடைந்திருந்தால் பகுதி 14க்குச் செல்லவும்.

**12. கொடுங்கோன்மை**

இந்த மக்களை, நீங்கள் வெற்றிகொண்ட இந்த பரிதாபகரமான உயிரினங்களைக் கண்டால் உங்களுக்குப் பற்றிக்கொண்டு வருகிறது. இந்தக் கோரமான போரை அவர்கள்தான் தொடங்கினார்கள்! இப்போது நீங்கள் அவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும்.

நீங்கள், பெரிய பெரிய அரங்குகளையும், இன்னும் சிறப்பான விரைவு உணவகங்களையும் அவர்களைக் கொண்டு கட்டுவிக்கச் செய்தீர்கள். ஒருக்கால் அது கொடுங்கோன்மையாகலாம், ஆனாலும்கூட அது புன்முறுவலுடன் கூடிய அடக்குமுறை. ஏனெனில், அவர்களை நீங்கள் மிகவும் நேசிக்கிறீர்கள். எனவேதான், அவர்கள் உங்களைப் போலவே இருக்கவேண்டும் என்று நினைக்கிறீர்கள்; உங்கள் பாடத்தைக் கற்றுக்கொண்டவுடன் அவர்களும் உங்களைப் போலாகிவிடுவார்கள். நீங்கள் உங்கள் உலகை அனுபவிக்கும் அளவிற்கு, அவர்கள் அவர்களுடைய உலகை அனுபவிக்க வேண்டும் என்று கருதுகிறீர்கள்; அல்லது நீங்கள் வெறுப்பதுபோலவே அவர்களும் வெறுக்கவேண்டும். உங்களை உண்மையில் இன்னும் அதிகமாகப் பாராட்டவேண்டிய ஜான், ஜேன் இருவரின் நலனுக்காகத்தான் இவையனைத்தும்.

துரதிர்ஷ்டவசமாக உங்களுடைய புன்முறுவல்கள் அவர்கள் மீது உங்களுக்கு இருக்கும் நேசத்தை நம்பவைக்கப் போதுமானதாக இல்லை. அரசியல் படுகொலைக்கு எப்போதுமே இடமிருக்கிறது.

பகுதி 13க்குச் செல்லவும்

**13. அரசியல் படுகொலை**

ம் ஹூம்! யாரோ ஒருவர் எரிச்சலடைந்து உங்கள் தலைவரைக் குளியலறையில் வைத்துக் கொன்றுவிட்டார். குளியலறைச் சுவரில் மூளையெல்லாம் சிதறிக்கிடக்க கோரமான அலங்கோலம் அது.



*நீங்கள் யாரைக் குற்றம் சாட்டுவீர்கள்? ஏன்? அதுதான் வெட்ட வெளிச்சமாயிற்றே. துணைத் தலைவர், இரகசிய காவல்துறை, கம்யூனிஸ்ட்டுகள், மாணவர்கள், சாரணர்கள், குடித்துவிட்டு வாகனம் ஓட்டுபவர்கள், உங்களைத் தவிர வேறு யாராகவும் இருக்கலாம். நீங்களன்று, மக்கள் அனைவரும்தான் இதற்குப் பொறுப்பேற்கவேண்டும்! நீங்களன்று, மற்ற அனைவரும்தான் இதற்குண்டான தண்டனையைப் பெறவேண்டும்!*

*பதிலடி கொடுப்பது விரைவானது, பயனுறுதன்மை கொண்டதும்கூட. அவர்களுடைய தலைவரைக் கொன்று விடுகிறீர்கள்; மற்ற தலைவர்களையும் கூட; தலைவர்களாக இல்லாத சிலரையும் கூட.; அவர்களும் உங்கள் தலைவர்களில் பலரைக் கொல்கிறார்கள்; தலைவர்களாக இல்லாதவர்களையும். தெருக்களில் இரத்த ஆறு ஓடுகிறது.*

*இது மீண்டும் போரா? மீண்டும்? இல்லை, வெறும் குலைவுறுதல். அரசு அமைப்புகள் குலைவடைகின்றன. பள்ளிகளிலேயே தங்கிப் படிக்கும் மாணவர்கள் கூட்டம் அதிகமாகிறது. எவருமே அகற்றாததால் கழிவுகள் மலைமலையாகச் சேருகின்றன. வெப்பமாக்கிக்கொள்ள மக்கள் பாடப் புத்தகங்களை எரிக்கிறார்கள். ஜான், ஜேன் இருவரும் அக்கம்பக்கத்தினர் அளிக்கும் மிச்ச சொச்சத்தை உண்டு வாழ்கிறார்கள். ஒருவேளை யாராவது ஒருவர் ஓர் அணு ஆயுதத்தைக் கண்டெடுத்து, அதைப் பயன்படுத்தலாம். பயன்படுத்த தேவையில்லாமலும் போகலாம்.*

*எப்படி நடந்தாலும், நீங்கள் ஊழியின் இறுதிக்கட்டத்தை அடைந்துவிட்டீர்கள்.*

*பகுதி 14க்குச் செல்லவும்.*

**14. ஊழிக் காலத்தின் இறுதி**

*ஐயோ! உங்கள் நாகரிகம் அழிந்துவிட்டது. இனி விரைவு உணவு கிடையாது. இனி விளையாட்டு நிகழ்வுகள் கிடையாது. இனி இரண்டுக்கு ஒன்று என்ற விகிதத்தில் எருமைமாட்டுச் சிறகுகள் சிறப்புகள் ஏதும் கிடையாது.*

*அது ஒரு காளான் மேகம், பருத்தவாறு காற்றில் பறந்துபோய்விடும். அல்லது அனைவருடைய தோலிலும் வெடிக்கும் சீழ் பிடித்த கொப்புளங்கள் வரச்செய்யும் ஒரு கொள்ளை நோய். அல்லது மக்கள் தொகையில் நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டு விழுக்காட்டளவு மக்களின் மூளையைக் கொதிக்க வைக்கும் தீவிரக் கதிர்வீச்சு.*

*2.5 குழந்தைகள் உள்ள அனைத்து நல்ல குடும்பங்களும் (மகிழ்ச்சியாக இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம்) எரிமலையில் விழும் மழைபோல் ஆவியாகிப் போகலாம். அல்லது நஞ்சூட்டிய இரையை உண்ட எறும்புகள் போலப் பிணங்கள் குவியலாம். தப்பிப் பிழைத்தவர்கள் உயிருள்ள இறந்தவர்கள் மீது நடந்து வருகிறார்கள். கைப்பைகளிலிருந்து தானியப் பட்டைகளைத் திருடிக்கொண்டு பணப்பைகளை விட்டுவிடுகிறார்கள். காரணம், இனி யாருக்கு வேண்டும் பணம்?*

*அணுக்கரு பனிக்காலம் வருகிறது. அல்லது ஓர் உயிரியல் பேரழிவு. அல்லது வெறும் மனச்சோர்வு.*

*ஆனால், தப்பிப் பிழைத்தவர்கள் சிலர் இருக்கிறார்கள். எப்போதுமே உள்ளார்கள். அவர்களால் துவக்கவும் முடியும்.*

*பகுதி 15க்குச் செல்லுங்கள்*

### 15. எஞ்சுதல்

*கந்தலும் கிழிசலுமாக எஞ்சிய மக்கள் குழுக்கள் தடுமாறியவாறு தரிசு நிலம் அல்லது, சீரில்லாத கட்டுமானக் கல்குவியல், கைவிடப்பட்ட நகரங்கள் என்று ஏதேனும் ஒன்றைக் கடந்து வருகிறார்கள். ஜான், ஜேன் இருவரும் ஒரு நாளில் ஒரு சமயத்தில் ஒவ்வொன்றாகச் செய்கிறார்கள். அன்றாடம், இரவு வரை வாழ்வதே அவர்களுக்கு ஒரு சவால்; அடுத்தது இரவு முழுவதும் வாழ்வது, பிறகு இன்னொரு நாள் வாழ்வது.*

*உணவு, உறைவிடம் இரண்டிற்குமே பற்றாக்குறை. பலரால் தாக்குப்பிடிக்கமுடியவில்லை. காலம் செல்லச் செல்ல, கிடைக்கும் சொற்ப வளங்களைக் கொண்டே சமாளிக்கக்கூடிய அளவிற்கு மக்கள் தொகை சமன்படுகிறது. இதற்கு மாதக்கணக்கில் அல்லது ஆண்டுக் கணக்கில் ஆகிறது. ஆனால், போதுமான காலம் கடந்தபின், ஒரு சிறு இனக்குழு குகைக்குள் அல்லது ஒரு பாலைவனப் பசுந்திடல் அல்லது ஓர் ஆற்றங்கரையோரம் அமர்ந்துகொள்கிறது. ஜான் (அல்லது ஜேன்), "நினைவிருக்கட்டும், முன்பெல்லாம் எல்லாம் எவ்வளவு நன்றாக இருந்தது" என்று சொல்கிறான்(ள்). மற்றவர்கள் அவனை அல்லது அவளைப் பார்த்து பாறைகளை வீசி எறிகிறார்கள்; நினைவூட்டக்கூடாது என்று அதட்டுகிறார்கள். மறு உயிர்ப்பு அளிக்கமுடியாத காலாவதியாகிவிட்ட காலத்தை மறக்க நினைக்கிறார்கள்.*

*ஆனால், ஜேன் (அல்லது ஜான்) கவனிக்கிறாள்(ன்), காத்திருக்கிறாள்(ன்), நினைவுபடுத்தியும் கொள்கிறாள்(ன்).*

*மற்ற அனைவரும் உண்மையாகவே மறந்துவிட்டவுடனேயே கடந்தகாலம் ஒரு தொன்மம் ஆகிவிட்டது. அவளு(னு)க்கு, ஓர் எண்ணம்; அவள்(ன்) மற்றவர்களிடம் சொல்வது, "உங்களை மகிழ்ச்சி, சுதந்திரம் இரண்டிடமும் அழைத்துச் செல்கிறேன்! எல்லோரும் என்னைப் பின் தொடருங்கள்!" ஜான் (அல்லது ஜேன்) இனக்குழுக்களை ஒருங்கிணைக்கிறார்கள். ஜேன் (அல்லது ஜான்) செயல்படக்கூடியதாக ஒரு புதிய கருத்து, எவருக்கும் இருந்ததைவிடச் சிறந்ததாக தனக்கு இருப்பதாக நினைத்துக்கொள்கிறாள்(ன்). எப்போதும் போல, சில குறிப்பிட்ட தெரிவுகளைச் செய்தே ஆகவேண்டும். ஆனால், இறுதிக்கட்டத்தில் ஜேன், ஜான் இருவரும் எவ்விதத்திலும் உங்களிலிருந்து வேறுபட்டவர்கள் அல்லர். அவர்கள் உங்களைக் காட்டிலும் சூடிகையோ கூரறிவோ படைத்தவர்கள் அல்லர். அவர்கள் யாரோ வேறொருவர் அவ்வளவே.*

*பகுதி 16க்குச் செல்லவும்*

### 16. ஆரம்பம், மீண்டும்

*தெரிவுகள் எல்லாம் நடுக்க மூட்டக்கூடியவை என்று நீங்கள் நினைத்தீர்களா? அவை அப்படித்தான் இருந்தன.*

*உங்கள் தெரிவுகள் உங்களை எங்கே வழிநடத்திச் சென்றிருக்கின்றன என்பதை அறிந்து ஏமாற்றம் அடைந்துவிட்டீர்களா? அடையாதீர்கள். மற்ற தலைவர்கள் முயன்று பார்த்து பின் தோல்வி அடைந்திருக்கிறார்கள். கடந்த காலத்தைப் போலவே அதே தெரிவுகள் வருங்காலத்தில் நிரம்ப இருக்கின்றன. எவருக்குமே தெரிவுகளைப் பிடிப்பதில்லை; ஆனால், நாகரிகம் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கிறது.*

*மீண்டும் ஆரம்பநிலைக்கே வந்துவிட்டதை உணர்கிறீர்களா? வந்துவிட்டீர்கள். இது ஒரு வட்டம். ஆனால், மாற்றத்திற்கான நம்பிக்கை எப்போதுமே இருக்கிறது. வட்டமானது ஒரு சுழல் படிக்கட்டைப்போலாகிவிடும் என்று நம்பிக்கை.*

*இங்கே பாருங்கள். இதைப் பாருங்கள். ஓர் அறை, ஒரு மேசையுடன். அது மாலை அல்லது இரவாக இருக்கலாம். மேசையைச் சுற்றி அமர்ந்திருக்கும் மூவரையும் கூர்ந்து கவனியுங்கள்; ஜான், ஜேன், அவர்களுடைய குழந்தை; ஜான் புன்னகைக்கிறான். அவனுக்கு முகச்சவரம் செய்துகொள்வது அவசியமாக இருக்கிறது, அல்லது அவன் தாடி வைத்துக்கொண்டிருக்கிறான். ஜேன், தன்னுடைய அன்றைய அனுபவங்களைக் குடும்பத்தாரிடம் சொல்லியவாறு லசானே அல்லது கோழி பிரியாணி பரிமாறுகிறாள். அந்தக் குழந்தை ஆணோ பெண்ணோ. குழந்தையானது, உயரமான குழந்தை உணவு நாற்காலியில் அமர்ந்துகொண்டு ஜான், ஜேன் இருவரையும் போற்றும் பார்வையுடன் பார்க்கிறது. சாப்பிட்ட பிறகு, பெற்றோர் தாலாட்டு பாடியவாறு குழந்தையை மாடிக்கு அழைத்துச் செல்கிறார்கள். அன்று ஒரு நல்ல நாளாக இருக்கிறது.*

*அவர்களுடைய உலகம் அதீதத்தன்மையுடனோ பழமையை விரும்பும் தன்மையுடனோ இருக்கிறது. பொறுப்பான குடிமக்கள் போல் அவர்கள் வாக்குப்பதிவு செய்தாலும் குழந்தை நடைபழகுவதைக் கண்டு அவர்கள் கிளர்ச்சி அடைகிறார்கள். குழந்தை புரட்சி காலத்தின் நடுவில் அல்லது புரட்சி காலம் இல்லாத காலகட்டத்தில் வளர்ந்து ஓர் ஆணையோ ஒரு பெண்ணையோ திருமணம் செய்துகொண்டு இருக்கிறது அல்லது திருமணம் இல்லாமலே இருக்கிறது. அவள்(ன்) கற்பனை நல்லுலகு/ தீய உலகு நிலவும் அல்லது இரண்டுமே இல்லாத ஓர் உலகில் ஒரு குடும்பத்தை நடத்துகிறாள்(ன்). ஊழியின் இறுதிக் காலக்கட்டத்தில் அவளோ(னோ) தம் குழந்தைகளுடன் வசிக்கிறார்கள்; அக்குழந்தைளே வளர்ந்து ஆளாகி ஒரு குழந்தையுடன் இருக்கிறார்கள். அழிவு இருந்தபோதும் ஒரு குழந்தை பிறக்கிறது.*

*உங்களுக்கு ஒரு நாகரிகம் கிடைத்துவிட்டது.* ●

**மாதங்கி** <madhunaga@yahoo.com.sg>

# டி. கண்ணன் கவிதைகள்



## நினைவுகள் துவையத் துவைய

அவன் உடலிலிருந்து நறுமணம்
ஒன்று புறப்பட்டது
எந்த பாகத்திலிருந்து என்று
அவன் ஆராயவில்லை
அவனுக்கு வேலையிருக்கிறது
வாய்க்கால் மேடேறி
அந்த பக்கமாய் இறங்கி விட்டான்
ஒற்றை செம்போத்து
அவன் காண
வீழ்ந்து கிடந்த மரங்களினூடே
பறந்து மறைந்து விட்டது

*(சாயாவனம் கந்தசாமியின் சிதம்பரத்திற்கு)*

## யாசகம்

வெட்டிய தலையை
முதுகில் வைத்துக் கொண்டு
ஒலியெழுப்பி
தன்னைத்தானே விரட்டியபடிக்கு
கபந்தமாய்
தெருவில் பவனி வருகிறது
அந்த ஆடு

## பொதுப்புத்தியின் லைக்கு

காலியாய் கிடந்தது தெரு
தெருமுனை மின் ஒளியில்
நடந்து வந்து கொண்டிருந்த
அந்த வயதான ஒருத்தி
என்னைப் பார்த்து
“நீ அழகாய் இருக்கிறாய்”
என்றாள்
அப்படியொன்றும்
அவளுக்கும்
வயதாகிவிடவில்லை

## 4.

நினைவில் நீந்திக் கொண்டிருந்த மலர் ஒன்று
பள்ளத்தாக்கில் வீழ்ந்து கொண்டிருந்தது
இடை பறந்த மடையான் ஒன்று
அதைப் பற்றி என் கை சேர்த்தது
மலர்
பள்ளத்தாக்கு
மடையான்
இவை எவற்றின் உருவகங்கள்
இதில் நான்
எந்த உருவகத்தின்
காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்

## கனிமப் பொறுமை

தொலைந்த செருப்பை
எல்லா இடத்திலும் தேடினேன்
கிடைக்கவில்லை
துரத்தும் தொலைதூர பள்ளித் தேர்வுகள்
கனவும் முடிந்தது
அந்த செருப்புகள்
வேறொரு கனவில் இருந்தன
அதை எங்கே போய் எனத்
தேடுவேன்

## 6.

எந்த நிபந்தனைக்கும்
வேண்டுகோளுக்கும்
அடங்க மறுக்கிறது மனம்
சீரழிந்துக் கொண்டிருக்கிறது
உடல்
மனதை தீர்மானிக்கும்
ஆணவம்
அதற்கு ●

**“டி. கண்ணன்”** <krishnaswamy164@gmail.com>

# மனிதரில் எத்தனை நிறங்கள்



நோயல் நடேசன்

ஓவியம்: Salah Elmur

மனிதர்கள் எல்லோரும் இனவாதிகளே. நிறவாதிகளே. அழகான பெண்ணை விரும்பியவர்கள் எல்லாம் யார்? அவர்கள், நிறத்திற்கு முன்னுரிமை கொடுக்கவில்லையா?

மெல்பனின் குளிர்காலம் எப்படி என்றால், மழையோடு தென்சமுத்திரத்தில் இருந்து வரும் குளிர்காற்று ஒன்றோடு ஒன்றாகக் கலந்து இடி முழக்கத்தோடு மழையாக தேனிலவு கொண்டாடும் அந்தநாளில், எவரும் நாய் பூனைகளுடன் என்னைத்தேடி வரப் போவதில்லை. அவர்கள், தங்கள் வீடுகளைக் கூடாக்கியபடி, வீட்டின் கணகணப்பில் மகிழ்வாக இருப்பார்கள் என்ற நினைப்போடு அறையில் இருந்தேன்.

மதியமாகி விட்டது எனக் கடிகாரம் காட்டியது. ஆனால், வெளியே சீதோஸ்ண நிலைமை அதற்கான அறிகுறியற்று மாறாது இருந்தது.

எனது மிருக வைத்திய வேலையிடத்தில் இருந்து எனது வீட்டுக்கு ஐந்து நிமிடங்களில் செல்லமுடியும் என்பதால் மதியத்தில் உணவுக்குச் செல்வேன். அன்றைய தினம் அவ்வாறு செல்ல உடலும் மனமும் சோம்பலாக இருந்தது. தனது உணவை வாங்குவதற்காக பக்கத்திலிருந்த கடைக்குச் சென்ற எனது நேர்ஸ் பிலிண்டாவிடம் எனக்கும் உணவு வாங்கிவரச் சொல்லி விட்டேன். அவள் கொண்டுவந்த சான்விச்சை உண்டுவிட்டு கம்பியூட்டரில் கண்களை அலைபாய விட்டிருந்தேன்.

இலங்கையிலிருந்து வரும் போர்ச் செய்திகளைப் பார்த்து கொண்டிருந்தேன். போர்க்காலத்தில் தொடர்ச்சியாக பலவிதமான செய்திகள் வந்து கொண்டிருக்கும். பொய்கள், உண்மைகள், உண்மை கலந்த பொய்கள், பொய் கலந்த உண்மைகள் எனப் பலவிதமான செய்திகள்.

புனைகதைகள் மட்டுமே, வாசகனது கற்பனையை வேண்டி நிற்கும் என நினைத்தால் தற்பொழுது செய்திகளும் அதையே கேட்டு வாசகர்களின் அறிவுக்கு சவால் விடுகின்றன. பலதரப்பு விடயங்களைப் பார்த்து நாம் கூட்டிக் கழித்து, பெருக்கிப் பிரித்து உண்மை எதுவெனத் தெரிந்துகொள்ள வேண்டும்.

எனது அறைக் கதவினூடாக, உள்ளே தலையை நீட்டி, “உங்களை ஒருவர் பார்க்க வந்திருக்கிறார்” என்று பிலிண்டா சொன்னபோது, யாராக இருக்கும்... நண்பர்கள் வருவதென்றால் தொலைப்பேசியில் தெரிவித்து விட்டே வருவார்கள், என்ற சிந்தனையுடன் வெளியே வந்தேன்.

வெளியே ஆப்பிரிக்கருக்கே உரிய கறுப்பான நிறத்துடன், சுருள் தலைமயிர், ஆறரை அடி உயரமான ஒருவன் எழுந்து வந்து, மின்னும் வெள்ளைப் பற்களுடன், தனது பெயர் தோமஸ் எனச் சொல்லியபடி நீண்ட கையை நீட்டினான்.

என்னிலும் உயரமானவர்களைப் பார்க்கும் போது என்னையறியாது ஒரு பொறாமை உணர்வு என்னகத்தே தோன்றி மறையும். அந்த உயரமான இளைஞனுக்கு வயது முப்பது இருக்கலாம். அவனது நெடிய மெலிந்த உயரத்தால் முதுகில் மெதுவான கூன் தெரிந்தது.

“என்ன விடயம்? நான் என்ன செய்யலாம்?” கையை நீட்டியபடி கேட்டேன்.

“நான் ஒரு மிருக வைத்தியன். விக்ரோரிய மிருக வைத்திய சபை



உங்களைச் சந்திக்கச் சொல்லி இருக்கிறார்கள்."

"அப்படியா?" என் முகத்தில் அதிக உற்சாகம் இல்லை. நான் அவனை மீண்டும் நாற்காலியில் உட்கார சொல்லவில்லை. நின்றபடியே பேசினோம். அந்த இளைஞன் அதைப் பொருட்படுத்தவில்லை. தனது பேச்சைத் தொடர்ந்தான். "நான் சூடானிய மிருக வைத்தியர். இங்கு வந்து இரண்டு வருடங்கள். இதுவரையும் டாக்சியோட்டினேன். இப்பொழுது ஆங்கிலம் படித்து பாஸ் பண்ணிவிட்டேன். மிருக வைத்திய பரீட்சை எடுக்க நினைத்து அவர்களைத் தொடர்புகொண்டபோது உங்களுடன் பேசச் சொன்னார்கள்."

சூடான் என்றவுடன் என்னுள் வெறுப்பு மின்னலாகத் தோன்றி மறைந்தது.

"உடனே பேச வேண்டுமா?"

"இல்லை, நான் இந்தப் பக்கமாக டாக்சியில் வந்தேன். அவசரமில்லை. நீங்கள் ஒரு அப்பொயிண்மென்ட் தந்தால் மீண்டும் வந்து சந்திக்க முடியும்."

"எங்கு இருக்கிறீர்?"

"பக்கத்தில்தான், நோபல் பார்க்."

"சனிக்கிழமை மதியம் ஒரு மணிக்கு எனது வேலை முடியும். அதன்பின் நாம் பேச முடியும்" எனச் சொல்லி விடை கொடுத்தேன்.

அவன் சென்று அடுத்த இருமணி நேரத்திற்குள் எவரும் வருவதாக இல்லை. நான் நினைத்திருந்தால் எனது அறையில் வைத்து அவனுடன் பேசி இருக்க முடியும். விக்ரோரிய மிருக வைத்திய சபை இப்படி வெளிநாட்டிலிருந்து வந்த பலரை என்னிடம் அனுப்பி வைப்பார்கள். அவர்களைப் பொறுத்தவரை, நான் இந்தப் பரீட்சையில் தேர்ச்சியடைந்து, அதற்கான வழிகளைக் கடந்துவந்து, சொந்தமாக தொழில் செய்வதால் என்னை இந்தத் துறைக்கு வரும் புதியவர்களுக்குப் புரிய வைப்பதற்கு ஆரம்ப ஆலோசகராகப் பாவிப்பார்கள். இலங்கையைச் சேர்ந்த பலருக்கு, நான் தன்னார்வமாக முதல் உதவியாளராக இருந்திருக்கிறேன்.

தோமஸ், சூடான் என்றதும் எனக்கு ஆரம்ப உணர்வாக அவனைத் தவிர்க்க நினைத்தேன். ஆனாலும் முடியவில்லை.

எதற்காகத் தவிர்க்க நினைத்தேன்?

இதற்கு இலகுவான பதில் என்னிடமில்லை.

அந்தசந்திப்புக்குமுன்னர்,இரண்டுவருடங்களுக்கு முன்பு நடந்த ஒரு சம்பவம் என்னை சூடானியர்களை வெறுக்க வைத்தது.'என்ன இவன் ஒரு இனவாதியாக இருக்கிறானே' என்று நீங்கள் என்னைப் பற்றி

நினைக்கலாம்! தவறில்லை.

மனிதர்கள் எல்லோரும் இனவாதிகளே. நிறவாதிகளே. அழகான பெண்ணை விரும்பியவர்கள் எல்லாம் யார்? அவர்கள், நிறத்திற்கு முன்னுரிமை கொடுக்கவில்லையா? கறுப்பாக இருப்பவர்களே அதிகமாக வெள்ளைப் பெண்ணை மணமுடிக்கத் தேடுவார்கள். நான் பிறந்து வளர்ந்த தென் ஆசியச் சமூகத்தின் குணங்களில் சிறிதளவாவது என்னிடம் இருக்காதா?

அதை விடுங்கள். தங்கள் குழந்தைகள் கொஞ்சம் நிறமாகப் பிறக்க வேண்டும் என விருப்பம் இல்லாதவர்கள் யாராவது இருந்தால் கையைத் தூக்குங்கள். இங்கே எனக்கு நிறம் பிரச்சினையா? அல்லது அவனது நாடுதான் பிடிக்கவில்லையா? எனக்கு எந்த சம்பந்தமும் இல்லாத ஒரு நாட்டினரை நான் வெறுக்க வேண்டிய தேவையில்லையே!

இப்படியான தர்க்கிக்கக் கூடிய காரணங்களுக்கு அப்பால் சூடானியர்களை நான் விரும்பாததற்கு ஒரு காரணம் உள்ளது. நட்பு சார்ந்த விடயம். அதாவது நண்பனுக்காக. அது என்னைப் பொறுத்தவரை முக்கியமானது.

நான் சூடானியர்களைப் படிப்படியாக வெறுக்க வில்லை. திடீரென ஒருநாள். நேரம் காலம் திகதி, எல்லாம் என்னால் சொல்ல முடியும். ஒரு கோடைக்கால சனிக்கிழமை. சரியாக சொன்னால் நான் ஓய்வாக வீட்டிலிருந்த ஒருநாள், மாலை நான்குமணி.

சூடான், ஆபிரிக்காவிலே பூமத்திய ரேகைக்குச் சிறிது வடக்கில் உள்ளது. ஆப்பிரிக்காவிலே பெரிய நாடு. கறுப்பும் ஒலிவ் நிறமும் கலந்த அரேபியர்களும் கறுப்பு ஆப்பிரிக்கர்களும் பல காலமாக ஒன்றாக வாழ்ந்த நாடு. ஆரம்பத்தில் கறுப்பு இஸ்லாமியர்களான டாபூர்களும் அரேபிய இஸ்லாமியர்களும் சண்டையிட்டார்கள். கொலை செய்தார்கள். அகதியானார்கள்.

பின்பு அரேபியர்களுக்கும் தென்பகுதியில் உள்ள கிறிஸ்தவ கறுத்த இனத்தவர்களுக்கும் சண்டை. தனிநாடு கேட்டுப் போராடி, இப்பொழுது தென்சூடான், கறுப்பு இனத்தவர்கள் மட்டுமுள்ள புதிதாக சுதந்திரம் அடைந்த நாடாகியுள்ளது. இவர்களே வரலாற்றில் நூபியர்கள், நூறு வருடங்கள் எகிப்தை ஆண்டவர்கள் என்ற பழைய வரலாறும் எனக்குத் தெரியும். இப்படியான பொதுஅறிவு இருந்தபோதிலும் தனிப்பட்ட ரீதியில் எனக்கு சூடானியர் எவரையும் தெரியாது.

அந்த சனிக்கிழமை மாலை. வீட்டில் தேநீர் அருந்தியபடி, சோம்பலாகத் தொலைக்காட்சி பார்த்தவாறு நான் இருந்தபோது, தொலைப்பேசி ஒலித்தது. தேநீர்க் கோப்பையை வைத்துவிட்டு தொலைப்பேசியை எடுத்தபோது, அடுத்த முனையில் எனது நண்பன் அகமது ஹாசன். "எனது மனைவி கொலை செய்யப்பட்டாள். மவுண்ட் ரோட் மருத்துவமனைக்கு வரமுடியுமா?" என்றான்.

செய்தி மிகவும் சுருக்கமானது. ஆனால், துப்பாக்கி குண்டுபோல் எனது இதயத்தைத் தாக்கியது. நாற்காலியில் உறைந்து விட்டேன். உடனே எழ முடியவில்லை. பதகளித்து விட்டேன். யாராவது உங்களுக்குக் காதைப் பொத்தி பலமாக அடித்தால் எப்படி இருக்கும்?

மெதுவாக சுதாரித்தபடி எழுந்து மனைவியிடம் விடயத்தைச் சொன்னேன்.

பத்து வருடமாக எங்கள் இரு குடும்பங்களும் அறிமுகமானவர்கள். ஒன்றாக உணவருந்தியுள்ளோம். நானும் அகமதுவும் ஒன்றாக நான்கு வருடங்கள் மெல்பன் மிருக வைத்திய நிலையத்தில் வேலை செய்தவர்கள் மட்டுமல்ல, ஒரே காலத்தில் அவுஸ்திரேலியா வந்தவர்கள். அகமது லெபனானைச் சேர்ந்தவன். அக்கால சோவியத் ரஷ்யாவில் படித்தவன். அவனது மனைவி லைலா ஒரு மருத்துவர். எனது மனைவியிலும் சில வயது இளமையானவர். ஒரு குழந்தையுடன் இங்கு வந்து பின்பு இரண்டு குழந்தைகளை மெல்பனில் பெற்றார்.

குழந்தைகளை வளர்ப்பதற்காகப் பல வருடங்கள் வேலை செய்யாது, வீட்டில் காத்திருந்துவிட்டு இரண்டு வருடம் முன்பாகத்தான் மருத்துவராக வேலை செய்வதற்குச் சென்றார். அழகும் அமைதியும் கொண்டவர்.

அந்த அதிர்ச்சிதரும் செய்தியை எங்களுடன் வேலைசெய்த கார்லோஸ் என்ற மற்றொரு நண்பனுக்குச் சொல்லிவிட்டு, சம்பவம் நடந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்தேன்.

நான் அங்கு சென்றபோது லைலா பணியாற்றிய அந்த மருத்துவ நிலையத்தின் சுற்றுப்புறம் பொலிஸாரால் நிரம்பியிருந்தது. அவர்களது வாகனங்களுடன் இரண்டு அம்புலன்ஸ்களும் அங்கு நின்றன.

எனக்கு முன்பாக கார்லோஸ் அங்கு சென்றுவிட்டான். லைலாவின் பிரேதத்தை ஏற்கனவே அம்புலன்சில் மருத்துவமனைக்குக் கொண்டுசென்று விட்டார்கள். ஏற்கனவே கார்லோஸ் இந்த விடயம் எப்படி நடந்தது என அறிந்திருந்தான். வைத்தியத்திற்கு அந்த மருத்துவமனைக்கு வந்த சூடானிய அகதி ஒருவன் லைலாவின் கழுத்தைக் கத்தியால் வெட்டிக் கொலை செய்ததாக கார்லோஸ் சுருக்கமாகச் சொன்னான்.

அதற்குமேல் நான் எதுவும் கேட்கவில்லை. நான் ஏன் முழு விபரமும் அறியவேண்டும்? நண்பனது மனைவி இறந்துவிட்டது மட்டுமே முக்கிய விடயமாக இருந்தது. அவனுக்கு ஆறுதலாக நாம் அங்கு சென்றோம்.

நாங்கள் அங்கு நின்ற நேரத்தில், ரயில் நிலையத்தருகே ஒரு கறுப்பு இளைஞனைப் பிடித்ததாக பொலிசுக்கு வயர்லெஸ் செய்தி வந்தது. அதைப் பொலிசார் அகமதுவுக்குச் சொன்னது எங்களால் கேட்க முடிந்தது. அந்த மருத்துவ நிலையத்திற்கு சிறிது தூரத்தில் ரயில் நிலையம் அமைந்துள்ளது. நாங்கள் அகமதுவின் கையைப் பிடித்து அழுத்திவிட்டு எதுவும் பேசாது அவனருகே நின்றோம். சிறிது நேரத்தில் அவனது சகோதரி வந்து அவனை அழைத்துச் சென்றுவிட்டாள். நானும் நண்பன் கார்லோசும் பக்கத்திலிருந்த மதுச்சாலைக்குச் சென்று குடித்தோம். குடித்துவிட்டு நண்பனின் வீட்டில் கொலைக்கு என்ன காரணமாக இருக்கும்? ஏன் இப்படி நடந்தது என்று எமக்குள் பல கோணங்களில் பேசித் தீர்த்தோம்.

அகமதுவின் கிளினிக்கை சில நாட்கள் நான் நடத்தினேன். அவன் மனம் தேறிவரும்வரை அதை நடத்துவதாகக் கூறினேன். ஆனால், அவன் தன்னால் மீண்டும் வேலைசெய்ய முடியாது அதற்கான மனநிலை இல்லை. நீ வாங்குவது என்றால் உனக்கு விற்கிறேன், என்றான். என்னிடம் பணமில்லை. ஏற்கனவே கடன் பல இருக்கிறது என நான் மறுத்தேன். இதன்பின்பு சில காலத்தில் அவன் தனது கிளினிக்கை விற்றுவிட்டான். அவனது மூன்று பெண் குழந்தைகளை வளர்க்க வேண்டிய தேவை இருந்தது.

வழக்கு நீதிமன்றத்தில் நடந்தபோது பலவிடயங்கள் வெளியாகியது. அந்த இருபத்தைந்து வயதானவன் கென்யாவிலிருந்து அகதியாக அவுஸ்திரேலியா வந்திருந்தான். அவனுக்குக் குடும்பமில்லை. நண்பர்கள் சிலரோடு ஒன்றாக இருந்திருக்கிறான். வழக்கமான இரத்த பரிசோதனைக்கு வந்தபோது அவனது இரத்தத்தில் ஹெபரைரிஸ் சி (Hepatitis C) எனப்படும் கிருமி இருந்துள்ளது. இது ஊசிகள் மூலம் பரவும் வைரஸ் ஆகும். போதை வஸ்து ஊசிகளைத் தங்களுக்கிடையே பரிமாறுபவர்களிலேயே காணப்படும் நோய் இது.

சில வேளைகளில் வைத்தியசாலைகளில் இரத்தம் ஏற்றும்போது அல்லது சுத்தப்படுத்தாத ஊசிகளால் இது பரவக்கூடும். இந்த வைரசுக்கு (அப்பொழுது) நேரடியான மருந்து இல்லை. அதனால் நோய் அறிகுறியிருந்தால் மட்டும் வைத்தியம் செய்வார்கள். மேலும் இந்தக் கிருமி பல வருடங்கள் உடலில் எந்த உபாதையும் கொடுக்காது உறங்கு நிலையில் இருக்கும்.

அவன் தனது நோயை எப்படியும் குணமாக்கப் பல வைத்தியசாலைகளை மெல்பனில் அணுகியிருந்தான். ஆனால், எல்லோரும் கையை விரித்து விட்டார்கள். கிட்டத்தட்ட ஒரு வருடம் பின்பாக அவனது நோயைக் கண்டுபிடித்த லைலாவிடம் வந்திருக்கிறான். அவனிடம் கத்தி இருந்தது. அந்தக் கத்தியால் 21 தடவைகள் லைலாவைக் குத்தியிருக்கிறான். அந்த இடத்திலேயே லைலாவின் மரணம் சம்பவித்து விட்டது.

அறையைவிட்டு அவன் வெளியேறும்போது,“நான் பழிதீர்த்து விட்டேன்” எனச் சொல்லிக்கொண்டு, இரத்தம் தோய்ந்த கத்தியுடன் வெளியேறினான். முன் மேசையிலிருந்த ரிசப்சனிஸ்ட் பதறியடித்தபடி உட்சென்றபோது, நிலத்தில் இரத்த வெள்ளம் தேங்கி யிருந்தது. கழுத்தில் பல வெட்டுகளுடன் கதிரையில் தனது ஸ்ரெதஸ்கோப்பை மடியில் வைத்தபடி லைலா சாய்ந்தபடி இறந்திருந்தார்.

நீதிபதி அவனைக் குற்றவாளி எனக் கண்டு, இருபத்தைந்து வருடம் சிறைத் தண்டனை கொடுத்தாலும் அவனது செயலுக்கு டிலுசனல் சைக்கோசிஸ் (Delusional Psychosis) என்ற மனோ வியாதியே காரணம் என்பதால் அவன் தொடர்ந்து மனநல வைத்தியசாலையில் வைத்து சிகிச்சை அளிக்கப்பட வேண்டும் எனத் தீர்ப்பளித்தார்.

அகமது, அவனுக்கு அந்த தண்டனை போதாது என்று சொல்லியபடியிருந்தான். “எல்லா சூடானியர்களும் குற்றவாளிகள், அவர்கள் கிறிஸ்தவர்கள் என்ற ஒரே காரணத்தால் அவுஸ்திரேலியா அகதி அந்தஸ்து கொடுத்து உள்ளே அனுமதித்தது” என்பான்.

அகமதுவிடம் நான் அடிக்கடி செல்வேன். அவனது வாழ்க்கையில் நடந்த பல சம்பவங்களில் கலந்துகொண்டேன். அவனது குழந்தைகள் வளர்ந்து நன்றாகப் படித்தார்கள். தாயற்ற குறை அவர்களுக்குத் தெரியாது வளர்த்தான்.

மனைவியின் கொலை அவனை நிரந்தர நோயாளியாக்கி விட்டது. நீரிழிவு, இரத்த அழுத்தம், சிறுநீரக பாதிப்பு எனப் பல நோய்கள் அவனைத் தஞ்சம் அடைந்துவிட்டன. அகமதுவைத் தொடர்ச்சியாகப் பார்த்துக் கொண்டிருந்த எனக்கும் சூடானியர் மீதான வெறுப்பு அவனிடமிருந்து தொற்றிவிட்டது .

ஒருவனது நடத்தைக்காக முழு நாட்டவரையும் வெறுப்பதா? ஆனால், மனித மனங்கள் அப்படி யானவை. மனதில் ஏற்படும் எண்ணங்களுக்கும் பகுத்தறிவுக்கும் தொடர்பில்லை. தர்க்கத்திற்கு அப்பாலானது.

நண்பன், அயலவன் என எந்தவொரு சூடானியர்களோடும் சேர்ந்து பழக வேண்டிய தேவையும் எனக்கு இருக்கவில்லை. குறைந்தபட்சமாக ஒரு நாய் அல்லது பூனை வைத்திருக்கும் சூடானி யனைகூட எனக்குத் தெரியாது. என்னால் அவர்களை எட்டத்தில் வைத்து இலகுவாக வெறுக்க முடிந்தது. தெரியாதவர்களை வெறுப்பது ஒரு விதத்தில் இனிமையானது கூட.

ஆனால், ஒரு சூடானியனோடு பேசும் தேவை வந்துவிட்டது. என்னைத் தேடிவந்த அந்த தோமஸுக்கு உறுதியளித்தபடி அடுத்துவந்த சனிக்கிழமை அவனைச் சந்தித்தேன். பரீட்சைக்குப்

படிக்கவேண்டிய புத்தகங்கள், வரக்கூடிய கேள்விகள், செய்முறைகள் பற்றிச் சொல்லிவிட்டு இறுதியில் லைலாவைக்கொலைசெய்தவனைப் பற்றி அவனிடம் விசாரித்தேன்.

தோமஸ், தான் அவனோடு சில காலம் ஒன்றாக அறையிலிருந்தேன் என்று சொல்லியபின் சில விடயங்களைச் சொன்னான்.

மாலி என்ற அவன், தென் சூடானைச்சேர்ந்தவன். பத்து வயதாக இருக்கும்போது கடத்தப்பட்டு குழந்தைப் போராளியாக தென் சூடானில் உள்ள ஒரு போராட்ட அமைப்பில் போராளியாக்கபட்டான். இவர்கள் பல அட்டூழியங்களைச் செய்தார்கள். கிராமங்களுக்குள் சென்று கொலை, பலாத்காரம், தீ வைப்பது என்பன போன்ற கொடிய செயல்கள். அதேபோல் இவர்களுக்கு எதிராக சூடானிய இராணுவம் பல கொடுமைகளைச் செய்தது. எட்டு வருடங்களின் பின்பாக மாலி சிறைபிடிக்கப்பட்டு அங்கு சித்திரவதை செய்யப்பட்டான். சிறை யிலிருந்து விடுதலையானதும் பக்கத்து நாடான கென்யாவில் ஒரு அகதி முகாமுக்குச் சென்றான். அகதி முகாமிலிருந்தபோது ஒரு பாதிரியாரின் உதவி யினால் சர்வதேச அகதிகள் அமைப்பில் பதியப்பட்டு அவுஸ்திரேலியா வந்தான்.

மெல்பனில் மாலிக்கு ஒரு காதலி இருந்தாள். அவளைத்திருமணம்முடிப்பதற்காகதீர்மானித்திருந்த காலத்திலே அவனது இரத்த சோதனை முடிவுகள் வந்தது. அவனது இரத்த சோதனையைத் தெரிந்து கொண்ட காதலி அவனைப் புறக்கணித்து விட்டாள். அவன் சமூகத்தில் பலரோடு சண்டை பிடித்துக் கொண்டிருந்த காலத்திலேதான் லைலாவின் கொலையும் நடந்தது.

“அவன் ஏன் அந்த பெண் டாக்டரைக் கொலை செய்யவேண்டும்? அந்த டாக்டர் எனக்கு மிகவும் தெரிந்தவர். மிகவும் நல்லவர்...”

“எமக்கும் அந்தக் கேள்வி வந்தது. அவனிடம் அரேபியர் மீது வெறுப்பு இருந்தது. அவன் சிறையிலிருந்தபோது அவர்களால் சித்திரவதை செய்யப்பட்டவன். சிறையிலிருந்த காலத்திலே அவனுக்கு இந்த நோய் வந்திருக்கலாம் என நினைத்துக்கொண்டு, எங்களுடன் இருந்தபோது அவர்களைப் பற்றி குரோதமாகப் பேசுவான். தனக்கு வந்த அந்த நோய் அவர்களால் திட்டமிட்டு ஊசிமூலம் ஏற்றப்பட்டது என்பான். அதன் பிறகுதான் போராட்டத்திற்கு வருவதற்கு முடியாமல் தன்னைத் தவிர்கக அவர்கள் இதைச் செய்தார்கள் என்பதே அவனது வாதம்.

“இரவில் எழுந்து பலமணி நேரம் தன்னந் தனியனாக வெளியே நடப்பான். எங்களோடு சிலநேரங்கள் சகசமாகப் பழகிவிட்டு, ஒருசில நேரங்களில் குழப்பமானவனாக மாறிவிடுவான். நாங்கள் அவனைக் கணக்கெடுப்பதில்லை. அவனது நாட்டில் அவனது எட்டு வருடப் போராட்ட வாழ்வும் அதன் பின்பான சிறை வாழ்வும் அவனில் பல தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது என்பதை அறிந்ததால் நாம் அவனிடம் அதிகம் எதுவும் கேட்பதில்லை.

“காதலுக்குப் பிறகு அவனது நடத்தையில் மாற்றம் வந்தது. ஒரு சிடி செய்யும் தொழிற்சாலையில் வேலைக்குச் சேர்ந்து, காதல் கனவுகளில் இருந்தான். அந்தப் பெண் திருமணத்திற்கு மறுத்ததும் இவனது தலையில் அடித்து விட்டது என நாம் நினைத்தோம்.

“அந்த சம்பவம் நடந்த அன்று வேலைக்குப் போய்விட்டே வந்திருந்தான். அவனது முகத்தைப் பார்த்ததும் நாங்கள் ஏதோ வேலையில் பிரச்சினை என நினைத்தோம்” என்று தோமஸ் மாலியின் கதையைச் சொன்னான்.

“மாலி, ஒரு குழந்தைப் போராளி, தீவிரவாத இயக்கத்திலிருந்தவன் என்பது ஆரம்பத்தில் குடிவரவுத் திணைக்களத்திற்கோ (Immigration) நீதிமன்றத்திற்கோ தெரியாது. தெரிந்திருந்தால் அவனது மனநிலைக்கு மருத்துவ சிகிச்சை செய்திருக்கலாம்.”

“உண்மைதான். ஆனால், போராட்டங்களில், வன்முறையில் ஈடுபட்டவர்கள் தங்களது கடந்த காலத்தை மறைத்து விடுவார்கள். அதைச் சொன்னால் அகதி அந்தஸ்து தரமாட்டார்கள் என்ற எண்ணத்தால்.”

“தெரியும். நானும் அகதிகள் அதிகமாக உருவாகிய இலங்கையிலிருந்து வந்தேன். அத்துடன் அகதிகளுக்கு உண்மை சொல்வதைவிட, அகதி அந்தஸ்து பெறுவதே முக்கியம். ஆனால், பலருக்கு கடந்தகால மனக் குழப்பங்கள், அவர்களைப் பலவற்றைச் செய்யத் தூண்டும். மாலி போல் எதிர்காலமற்று கொலை, தற்கொலை மற்றும் குடும்ப வன்முறைகளில் ஈடுபட்டவர்களை நான் கண்டிருக்கிறேன். உடல் ஆரோக்கியம் இல்லாத போது அதனை மறைத்தால் அது அவருக்கே பாதிப்பு. ஆனால், மன ஆரோக்கியத்தை மறைப்ப தால் சமூகத்தில் பலரும் பாதிப்படைவார்கள்” என்றேன்.

இரண்டுமணி நேரமாக நானும் தோமஸுடன் அந்தக் கதைகளைப் பற்றிப் பேசியவுடன், குழந்தைப் போராளியாக வளர்ந்து பெரியவனான மாலிக்குப் பரிதாபப்படுவதா? லெபனானில் நடந்த உள்நாட்டுப் போரிலிருந்து தப்பி, வாழ்வதற்காக அவுஸ்திரேலியா வந்து இங்கே தனது அருமை மனைவியைப் பறிகொடுத்த எனது நண்பன் அகமதுவுக்காக பரிதாபப் படுவதா?

ஆனால், அதன்பிறகு சூடானியர்களின் மீது அதுவரை ஏற்பட்டிருந்த வெறுப்பு இறகு முளைத்த பறவைக் குஞ்சாகப் பறந்ததை மட்டுமே உணர முடிந்தது. ●

**நோயல் நடேசன்** <uthayam12@gmail.com>

# வாளும் வாழ்வும்



இந்திரா பார்த்தசாரதி

நம் நாட்டைக் காட்டிலும், மேல் நாடுகளில் மரணத்தைப் பற்றி அதிகம் சிந்திக்கின்றார்கள். நம் நாட்டைக் காட்டிலும் அங்கு மனித உயிரின் விலை அதிகம். இந்தியாவில் இப்பொழுது பசுவின் உயிர் விலை, மனித உயிர் விலையைவிட அதிகம்!

டெல்லியில் நான் இருந்த போது, ஒரு மூத்த பத்திரிகை நிருபரை என் நண்பர் அறிமுகம்செய்துவைத்தார். நிருபர் பெயர் கிஷன் சபர்வால். எல்லைப் புற மாநிலத்தைச் சேர்ந்தவர். நாட்டுப் பிரிவினைக்குப் பிறகு இந்தியாவுக்கு வந்தவர். ஒரு ஜப்பானியச்செய்திநிறுவனத்துக்கு நிருபராக இருந்தார்.

நேதாஜியின் இந்திய தேசிய ராணுவத்தில் பணி புரிந்தவர் என்று நண்பர் சொன்னார்.

அவர் வயதை ஊகிக்க முடியவில்லை. அறுபது மிருக்கலாம், எண்பதுமிருக்கலாம்.

"எனக்கு என்ன வயது இருக்கும் என்று யோசிக்கின்றீர்களா?" என்று கேட்டார் சபர்வால் சிரித்துக்கொண்டே.

"உங்களுக்கு 'டெலிபதி' தெரியுமா?" என்றேன் நான்.

"என்னை முதலில் பார்க்கும் எல்லாருடைய மனத்தில் எழும் முதல் கேள்வி இதுதான். என் வயது ஐந்து" என்றார் புன்னகையுடன்.

நான் ஒன்றும் புரியாமல் அவரைப் பார்த்தேன்.

"ருடால்ஃப் எஹ்ரன்பர்க் படித்திருக்கிறீர்களா?"

"இல்லை".

சபர்வால் ஒரு சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டார்.

"அவர் ஒரு விஞ்ஞானி. அவர் கருத்தின்படி, ஒருவன் இன்னும் எத்தனை ஆண்டுகள் மற்றவர்களுக்குத் தொந்தரவு கொடுக்காமல், பணியாற்ற முடியும் என்பதை வைத்துத்தான் அவன் வயதைக் கணக்கிட வேண்டும். என்னால் இன்னும் ஐந்தாண்டுகள் என்னையே நம்பிப் பணியாற்ற முடியும் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. அதனால்தான், ஐந்து வயது என்றேன். அந்த அளவுக்கு என்னிடம் இன்னும் ஐந்தாண்டு ஆற்றல் எஞ் சியிருக்கிறது" என்றார் சபர்வால்.

அப்பொழுது எனக்கு அமெரிக்க உளவியல் அறிஞர் கார்ல்யூங்கூறியிருப்பதுநினைவுக்கு வந்தது. ஒவ்வொருவருக்குள்ளும் எந்த அளவுக்கு அவரால் சாதிக்க இயலும் என்ற துலாக்கோல் இருக்கிறது. அது தன் எல்லையை அடைந்த நிலையில் பிறகு இயக்கமே இருக்காது. அவர் தம் ஆற்றல்கள் முழுவதையும் பயன்படுத்தி விட்டார் என்று அர்த்தம். அப்பொழுதுதான் ஆற்றலின் அல்லது அவர் உடலின் மரணம் சம்பவிக்கின்றது.

ஜோசஃப் தியோடர் கான்ராட் கொர்ஸெனி யோஸ்கி என்ற எழுத்தாளரைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறீர்களா? அவர்தாம் பிரசித்திபெற்ற ஆங்கில எழுத்தாளர் ஜோஸஃப் கான்ராட். போலந்தைச் சேர்ந்தவர். இருபத்தொன்று வயது வரை அவருக்கு ஆங்கிலம் சுத்தமாகவே தெரியாது. பிரிட்டிஷ் கப்பல் துறையைச் சேர்ந்து உலகம் சுற்றியவர். முப்பத்தைந்து வயதில் தம் முதல் நாவலை ஆங்கிலத்தில் எழுதியவர். பிறகு 'ஹார்ட் அஃப் டார்க்னெஸ்', 'லார்ட் ஜிம்' போன்ற அற்புதமான நவீனங்களை அவர் எழுதினார். 'நவீனத்துவத்தின் பிதாமகர்' என்று அவரைக் கூறுவார்கள். அவர்

இறந்துபோவதற்கு முன் பதின்மூன்று ஆண்டுகள் அவர் எழுதவேயில்லை. 67 வயதில் இறந்தார்.

அவர் இறந்து போவதற்குச் சில மாதங்களுக்கு முன் திடீரென்று சுத்தமாக ஆங்கில மொழியை மறந்து, போலிஷ் மொழியில்தான் பேசத்தொடங்கி விட்டாராம். அவருக்கே, தாம் தம் தாய்மொழி யில்தான் பேசுகிறோம் என்ற நினைவில்லையாம்! அதாவது, அவர் சிருஷ்டி ஆற்றலின் முழு எல்லையும் சாத்தியமான பிறகு, அவருக்குள்ளிருந்த படைப்பாளியின் மரணம் சம்பவித்திருக்கின்றது! ஆங்கிலமும் மறந்துவிட்டது! இறுதிக் காலங்களில் எழுதவும் முடியவில்லை!

இந்தப் பின்னணியில்தான் சில மேதைகள் இளைமையிலேயே இறந்து போவதை நம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது. ஆதிசங்கரர், விவேகானந்தர், பாரதியார், கணித மேதை ராமானுஜன், ஷெல்லி, கீட்ஸ்.. இவர்கள் அனைவரும் சாதனையின் எல்லையை அடைந்த நிலையில்தான் இறந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது!

சபர்வால், அவர் சொன்னபடி, ஐந்தாண்டுகளும், சில மாதங்கள் கழித்து, இறந்த போதுதான், அவர் குறிப்பிட்ட ருடால்ஃப் எஹ்ரன்பர்க் என் நினைவுக்கு வந்தார். சபர்வால் இறந்த போது, அவர் காலெண்டர் வயது தொண்ணூறு.

மரணத்தை கண்டு அஞ்சக்கூடாது என்பதற்காகத் தான் ருடால்ஃப் அப்படிச் சொல்லியிருப்பாரோ என்று தோன்றுகிறது. 'காலா என் காலருகே வாடா' என்று சொன்னவர் பாரதி. முப்பத்தொன்பதாம் வயதில் இறந்தார்!

நம் நாட்டைக் காட்டிலும், மேல் நாடுகளில் மரணத்தைப் பற்றி அதிகம் சிந்திக்கின்றார்கள். காரணம், நம் நாட்டைக் காட்டிலும் அங்கு மனித உயிரின் விலை அதிகம். இந்தியாவில் இப்பொழுது பசுவின் உயிர் விலை, மனித உயிர் விலையைவிட அதிகம்!

கனடா மக்மாஸ்டர் பல்கலைக்கழகத்தில், 'மரணமும், இறந்து கொண்டிருத்தலும்' (Death and dying) என்ற ஒரு துறை இருந்தது. அந்தத் துறை மாணவர்கள் அனைவரும் அறுபது வயதுக்கு மேற்பட்டவர்கள். நான் அங்குப் போயிருந்தபோது, ஒரு வயதான பெண்மணி என்னைக் கேட்டார்; "இந்தியாவில் நீங்கள் மரணத்தை எப்படி எதிர்கொள்ளுகிறீர்கள்?"

நான் சொன்னேன்: "இந்தியாவில் நாங்கள் மரணத்தை ஒரு முற்றுப் புள்ளியாகக் கருதுவதில்லை. எங்களுக்கு மறுபிறப்பில் நம்பிக்கை இருக்கிறது. ஒரு குடும்பத்தில் ஒரு குழந்தை பிறந்தால், அக்குழந்தையை அதன் பாலினத்துக்கேற்ப இறந்துபோன தாத்தாவோ பாட்டியோ மீண்டும் பிறந்திருக் கிறார் என்று சொல்வது வழக்கம். அதனால்தான் சாவு ஓர் அச்சுறுத்தும் செய்தியாக எங்களுக்கு இருப்பதில்லை".

அப்பொழுது ஒரு வயதான கிழவர் சொன்னார்: "நான் வாரணாசியைப் பற்றி ஓர் ஆவணப் படம் பார்த்தேன். அதில் கங்கை ஆற்றில் பாதி எரிந்ததும், பாதி எரியாததுமான உடல்களை தூக்கி எறிகிறார்கள். இதனால், சாவைக் கண்டு நீங்கள் அஞ்சவில்லை என்பது புரிகிறது. ஆனால், ஆற்றை அசுத்தப்படுத்த வேண்டுமென்பது அவசியந்தானா?"

என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் சிறிது தயங்கினேன்.

என் சங்கடத்தைப் புரிந்துகொண்டவர்போல், இன்னொருவர் கேட்டார்: "பிறப்பதும் அபத்தம், இறப்பதும் அபத்தம் என்கிறாரே சார்த்தர், அதைப் பற்றி உங்கள் கருத்து என்ன?"

"இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எங்கள் கவிஞர் ஒருவர் இதைப் பற்றிப் பேசியிருக்கிறார்" என்றேன் நான்.

'என்ன பேசியிருக்கிறார்?"

"காலம் என்பது ஒரு கற்பனை. அதை ஒரு மாபெரும் வாளாக நினைத்துப் பாருங்கள். அந்த வாளில், மனித உயிர் ஒவ்வொன்றும், ஒரு நாள் கழிந்தது என்ற பாவனையில் தொடர்ந்து அறுபட்டுக் கொண்டே போகின்றது. பாவனையாக இருந்தாலும், இந்த வாழ்நாள் எல்லைக்குள் தம் ஆற்றலைச் செயல்படுத்தியாகவேண்டுமென்று, எல்லாவற்றையும் உணர்கின்றவர்கள் முயல்கிறார் கள். அப்படி உணர்கின்றவர்களும் குறைவு என்பதால், 'அப்படி உணர்கின்றவர்கள் இருப்பார்களானால்" என்கிறார் கவிஞர். அபத்தத்தை முறியடிக்கும் வழியும் இதுதான்" என்று விளக்கமாகச் சொன்னேன்.

'அந்தக் கவிதையை உங்கள் மொழியில் சொல்லுங்கள்" என்று கேட்டார் ஒரு பெண்மணி.

'நாளென வொன்றுபோல் காட்டி உயிரீரும்

வாளது உணர்வார்ப் பெறின்"

என்று குறளைச் சொன்னேன்.

அவர்கள் குறளை ரசித்திருக்கக் கூடுமென்று எனக்குத் தோன்றியது. ●

**இந்திரா பார்த்தசாரதி**
<parthasarathyindira@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.
Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK**

